மலர் 14 இதழ் 324

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190; 761..



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 12-8-74 திங்கள் வெளியூர் 13-8-74 செவ்வாய்

முத்துசாமி-கல்யாணசுந்தரம் பகிரங்க மோதல்

2-ம் பக்கம்

## அரிசிப் பிரச்னை:

# சட்டசபையில் குற்றச்சாட்டு

## அரசுமீது நம்பிக்கையில்லா தீர்மானம்

**சென்னை, ஆக. 12— அரிசிப் பிரச்னை குறித்து எதிர்க் கட்சியினர் தி. மு. க. அரசு மீது இன்று சட்டசபையில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்தனர்.**

தி மு க அமைச்சரவை மீது கொண்டு வாப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானம் விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

இன்று காலை தமிழக சட்டசபைக் கூட்டம் ஆரம்பமாகியது.

கேள்விநேரம் முடிந்ததும் நம்பிக்கையில்லாத்தீர்மானங்களை உறுப்பினர்கள் கொடுத்துள்ளதாக சபாநாயகர் புலவர் கோவிந்தன் சட்டசபையில் தெரிவித்தார்.

சட்டசபை மரபின்படி முதலில் வந்த ஏ. ஆர். மாரிமுத்து (புது காங்கிரஸ்) அளித்த தீர்மானத்தை எடுத்துக்கொள்வதாக சபாநாயகர் அறிவித்தார்.

இதை விவாதத்துக்கு எடுத்துக் கொள்வதற்கு ஆதரவாக அ. தி. மு. க., பழைய காங்கிரஸ்; புது காங்கிரஸ்; சுதந்திரா கட்சி; வலது கம்யூனிஸ்டு, தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக் கழகம் ஆகியவற்றைச் சேர்நத 36 பேர் எழுந்து நின்றார்கள்.

தீர்மானத்தை முன்மொழியுமாறு ஏ. ஆர். மாரிமுத்துவை சபாநாயகர் அழைத்தார்.

பொன்னப்ப நாடார் (பழைய காங்கிரஸ்):— நம்பிக்கையில்லாத் தீர்மானங்களை அளித்தவர்களின் பெயர்களை அறிவித்தால் அவர்களுக்கும் விளம்பரம கிடைக்குமே.

சபாநாயகர்: கோவை செழியன், பொன்னப்ப நாடார், மருதாசலம், வடிவேலு, அழகிரிசாமி, என்.கே. பழனிசாமி ஆகியோர் இவ்விதத்தீர்மானங்களை கொடுத்துள்ளனர். சட்டசபையின் விதிப்படி முதலில் வந்த ஏ. ஆர். மாரிமுத்துவின் தீர்மானம் எடுத்துக்கொள்ளப் படுகிறது.

### அரிசிப் பிரச்னை

லத்தீப் (முஸ்லிம் லீக்):— உணவுப் பிரச்னை குறித்து நான் ஒரு அவசரத் தீர்மானம் கொடுத்திருந்தேன்.

சபாநாயகர்; நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீது எந்தப் பிரச்னை பற்றியும் பேசலாம்.

கோவை செழியன் ஓர் ஒழுங்குப் பிரச்னை கிளப்பினார்.

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை முதலில் விவாதத்துக்கு எடுத்துக்கொண்டதற்கு மகிழ்ச்சி, ஆனல் அரிசிப் பிரச்னை நாடு பூராவிலும் உள்ளது. ஆகவே ஒத்திவைப்புத் தீர்மானத்தை முதலில் எடுத்துக்கொண்டு அதன் பிறகு நம்பிக்கை யில்லாத் தீர்மானத்தை எடுத்துக் கொள்ளலாம் என்று கோவை செழியன் கூறினார்.

சத்தியவாணிமுத்து [தா. மு. க.): —அரசாங்க நிர்வாகம் குறித்து ஒரு மணி நேர விவாதம் வேண்டும் என்று ஒரு தீர்மானம் கொடுத்திருந்தேன.

சபாநாயகர்: எந்தப்பிரச்னையைப் பற்றியும் நம்பிக்கையில்லாத் தீர்மான விவாதத்தின்போது பேசலாம்.

லத்தீப்: உணவுப் பிரச்னை மீது விவாதத்துக்கு வாய்ப்பு அளித்தால், உணவு நெருக்கடிக்கு யார் காரணம் என்பதை என்னல் காட்டமுடியும்.

ஜேம்சும், முதலில் அரிசி பிரச்னை பற்றி விவாதிக்க வேண்டுமென்று கோரினர்.

முதலமைச்சர் கருணாநிதி குறுக்கிட்டு நமபிக்கையில்லாத் தீர்மானமே உணவுப் பிரச்சினையின் அடிப்படையில் தான் கொடுக்கப் பட்டுள்ளது என்று கூறினர்

### சங்கட நிலைமை

பிறகு ஏ. ஆர். மாரிமுத்து நமது நமபிக்கையில்லாத் தீர்மானத்தைமுன்மொழிந்து கூறியதாவது:— மாநில அரசு கையாண்ட கொள்கையால் தான் தமிழ்நாட்டில் உணவுப் பற்றுக்குறை ஏற்பட்டு விலையும் ஏறி, எல்லா மக்களுமே சங்கட நிலையில் ஆழ்ந்திருக்கிறார்கள்.

உணவில் தன்னிறைவு ஏற்பட்டுள்ளது என்று சொல்லப்பட்டது. 56 லட்சம் டன் விளைந்தது என்று அரசாங்கப் புள்ளி விவரம் தெரிவித்தது. நம்முடைய தேவை போக 10 லட்சம் டன் உபரியாக இருக்கவேண்டும். ஆனல் பற்றுக்குறை ஏற்பட்டு விலை ஏறியிருப்பதற்கு யார் காரணம்? என்ன காரணம்? அரசுதான் இதற்கு காரணம் என்று இந்த அமைச்சரவை மீது குற்றம் சாட்டுகிறேன்.

### பாலைவனமும் பசுஞ்சோலையும்

அரசாங்கம்கடமைஉணர்ச்சியோடு செயல்படவில்லை. கடத்தல், பதுக்கல் கொள்ளை லாபக்காரர்களுக்கு ஆதரவான நிலை உள்ளது. அதனல் ஏழை எளிய மக்கள் படுபாதாள நிலையில் வீழ்ந்துவிட்டார்கள் என்று குற்றம் சாட்டுகிறேன்.

பாலைவனத்தின் நடுவே தமிழகம் பசுஞ்சோலையாக இருக்கிறது என்று பட்ஜெட் விவாதத்தின்போது உணவு அமைச்சர் கூறினர். அந்த பசுஞ்சோலை இப்போது பாலைவனமாக ஆகியிருக்கிறது. இது இயற்கையாக ஆகவில்லை அரசின் கொள்கையால் பாலைவனமாகி உள்ளது. பதுக்கல், கடத்தல், கொள்ளைக்காரர்களால் பற்றுக்குறை ஏற்பட்டுள்ளது. இதற்கு அரசும் உடந்தை என்று குற்றம் சாட்டுகிறேன்.

நெல்லைக்கொள்முதல் செய்ய அரசு ஒன்றேகால் லட்சம் டன் என்று குறியீடு செய்து 80 ஆயிரம் டன் நெல்லைக் கொள்முதல் செய்தது. இதிலும் அரசு பெரும் தவறைச் செய்துள்ளது. எல்லையைஒழுங்காகக் கண்காணித்திருந்தால் நிலைமை இவ்வளவு மோசமாக ஆகியிராது.

### குற்றச்சாட்டு

கடத்தல்காரர்களுக்கும் அரசு உடந்தையாக இருந்திருக்கிறது என்று குற்றம் சாட்டுகிறேன். 'தஞ்சை மாவட்டத்தில் அதிகமாக நெல் விளைகிறது. அங்கு விளையும் 15 லட்சம் டன் சம்பா நெல்லில் 6 முதல் 7 லட்சம் டன் வரை உபரி இருக்கும் அந்த நெல்லை வாங்கி ஏன் அவசரத்தேவைக்கான கையிருப்பாக வைத்திருக்கக்கூடாது? கொள் முதல் அளவு ஒன்றேகால் லட்சம் டன் என்பது எந்த அடிப்படையில் கணக்கிடப் பட்டது? சென்னை கோவை குமரி மாவட்டங்களில் ரேஷனில் அளிக்க மாதம ஒன்றுக்கு 25 ஆயிரம் டன் அரிசி தேவைப்படுகிறது. அப்படி இருக்கும்போது ஒன்றேகால் லட்சம் டன் என்ன கணக்கு என்று புரியவில்லை.

### இமாலயத் தவறு

தஞ்சையில் கட்டுப்பாடு இருந்தபோது குறைந்த விலைக்கு வியாபாரிகள் வாங்கி ஸ்டாக் செய்து கொண்டார்கள். அந்த நெல்லை அரசு கைப்பற்றியதா? அரசாங்கம் செய்த இமாலயத் தவறு தஞ்சையிலிருந்த கட்டுப்பாட்டை தளர்த்தி எல்லா நெல்லையும் வெளியே கொண்டுபோக அனுமதித்ததுதான்.

அரிசிவிலை உயர்வுக்கு உரவிலை உயர்வுதான் காரணம் என்று கூறுகிறார்கள். அரிசி விலை உயர்வுக்கு காரணம் உரவிலை உயர்ந்ததல்ல.

புஞ்செய் தானிய கட்டுப்பாட்டை எடுத்ததாலும் அரிசி விலை உயர்ந்ததாகக் கூறுகிறார்கள். புஞ்செய் தானியக் கட்டுப்பாட்டை நீக்கினல் புஞ்செய் தானிய விலைதான் ஏறும். அரிசி விலை ஏருது. பதுக்கப்பட்ட நெல்லைவெளியே கொண்டுவர என்ன முயற்சி செய்யப்பட்டது? இதே போலத்தான் கடலெண்ணெயின் விலையைக்குறைக்க லெவி போடப்பட்டது. அதனல் என்ன பலன் ஏற்பட்டது?

நிலக்கடலையை மிகக் குறைந்த விலையில் விற்க விவசாயிகள் வற்புறுத்தப் பட்டார்கள்.

விவசாயிகளிடமிருந்து கடன் வசூலிக்க ஜப்தி நடவடிக்கை போன்ற காரணங்களால் நிலக்கடலை மூட்டை ஒன்றை 200ரூபாய்க்குக் கூட விற்கவேண்டிய நிலை விவசாயிகளுக்கு ஏற்பட்டது. அப்படி வாங்கப்பட்ட நிலக்கடலையால் மக்களுக்கு அதன் பலன் கிடைக்கவில்லை

### எங்கே சென்றது ?

தஞ்சையிலிருந்து அரிசி கொண்டுபோக திடீரென்று ஒருநாள் கட்டுப்பாட்டை நீக்கினீர்கள், அவசர அவசரமாக ஆயிரக்கணக்கான லாரிகள் அங்கிருந்து உரிசி எடுத்துச் சென்றன. அது எங்கே சென்றது என்று உங்களுக்குத் தெரியாதா? அது மக்களுக்கு கிடைக்கவில்லை. தஞ்சையிலேயே இப்போது படி அரிசி 4 ரூபாய் 50 பைசவுக்கு விற்கப்படுகிறது.

குறுவைக்கு தண்ணீர் விடுவதில்பருவக்கோளாறுகாரணமாக 1 மாதம் தாமதம் ஏற்பட்டது. எனவே குறுவடை அறுவடையும் 1 மாதம் தாமதம் ஆகிவிடும.

### ஆந்திர அரிசி

இதைச் சமாளிக்க ஆந்திரா விலிருந்து அரிசினை கொண்டுவர முடியுமா என்று ஆராய வேண்டும. இதை உடனடியாகக் கவனிக்கவேண்டும.

அரிசிப் பிரச்னை அடுத்த 3 மாதத்துக்கு மட்டுமல்ல. மேலும் நீடிக்கும. வழக்கமாகத் தஞ்சையில் 5 லட்சம ஏக்கரா பரப்பில்பயிரிடுவதற்குப் பதிலாக இந்த ஆண்டில் 3 லட்சம ஏக்கராவில்தான் பயிரிடப்பட்டுள்ளது.

இவ்வாறு ஏ. ஆர். மாரிமுத்து கூறினர்.

---

"அரிசி விலை உயர்வுக்கு

மத்திய அரசே காரணம்"

## நம்பிக்கையில்லா தீர்மானத்திற்கு கே.எம். சுப்ரமணியம் எதிர்ப்பு

**சென்னை, ஆக. 12—அரிசி விலை உயர்வுக்கு எதிர்ப்புத் தெரிவித்து தி. மு. கழக அரசு மீது எதிர்க்கட்சியினர் இன்று சட்டசபையில் கொண்டுவந்த நம்பிக்கையில்லா தீர்மானத்திற்கு சுயேச்சை உறுப்பினர் கே. எம். சுப்ரமணியம் கடும் எதிர்ப்புத் தெரிவித்தார்.**

விலைவாசி உயர்வுக்கு மத்திய அரசே காரணம் என்று கூறிய அவர், நம்பிக்கையில்லாத் தீர்மானம், மத்திய அரசு மீத கொண்டுவரபபட வேண்டும் என்றும் கூறினர்.

கே. எம். சுப்பிரமணியம் பேசியதாவது:—

மத்திய அரசால் எல்லாப் பொருட்களின் விலைகளும் ஏறி இருக்கின்றன. இதற்கு யாரும் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. நம்பிகையில்லாத் தீர்மானம் அங்கே கொண்டு வரப்படவில்லை, இங்கே கொண்டுவரப்படுகிறது. ஆறு ரூபாய் விற்ற பச்சரிசி அரசின் முயற்சியால் நகரில் 4ரூபாய்க்கு விற்கப்படுகிறது. இந்த ஆட்சி இந்தப்பிரச்சினையில் நல்ல முறையில் செயல்பட்டிருக்கிறது. இதற்காகப் பாராட்டுகிறேன்.

அரசியில் அரசியலைப் புகுத்தாதீர். சென்னை நகரில் 300 ரூபாய்க்குமேல் சமபளம உள்ளவர்களுக்கும மலிவு விலை அரிசி கிடைக்க செய்ததற்காக அரசை பாராட்டுகிறேன். இவ்வாறு கே.எம. சுப்பிரமணியம கூறினர்.

---

## 1 மணி நேரம் முன் கூட்டியே முடிந்த சட்டசபை

சென்னை, ஆக. 12—வழக்கமாக பகல் 1-30 மணிக்கு முடியவேண்டிய சட்டமன்றக் கூட்டம் இன்று 12-35 மணிக்கே முடிந்துவிட்டது.

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீது மேற்கொண்டு பேசுவதற்கு யாரும் பெயர் கொடுக்காததால், 12 35 மணியோடு கூட்டம் முடிந்ததாக, சபைக்குதலைமை வகித்த துணை சபாநாயகர் நா. கணபதி அறிவித்தார்.

## சென்னையில் பஸ் மோதி ஒருவர் காயம்

சென்னை, ஆக. 12— சென்னை திருவல்லிக்கேணியிலிருந்து அரும்பாக்கத்துக்குச் சென்று கொண்டிருந்த பல்லவன் பஸ் ஒன்று மோதியதால் ஒருவர் காயமடைந்து ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப் பட்டுள்ளார். இநத விபத்து இன்று காலை சுமார் 10 மணிக்கு நடந்தது.

மேற்படி பஸ் அங்கு இருந்த டெலிபோன் பூத் மீது முதலில் மோதியது. இதனல் அந்த பூத் உடைந்தது. பஸ்ஸின் முன் பகுதியும் சேதமடைந்தது.

---

## கொசுவுக்கு குடும்பக் கட்டுப்பாடு

சென்னை, ஆக. 12— கொசுக்களுக்கு குடும்பக் கட்டுப்பாடு செய்ய ஏற்பாடு செய்யப்படுமா என்று இன்று சட்டசபையில் அனந்தநாயகி (புது காங்கிரஸ்) கேட்டார், கூவம் சீரமைப்பு திட்டத்தின் விளைவாக கொசுக்கள், சென்னை நகருக்குள் புகுந்து மக்களுக்கு தொல்லை அளிப்பதாக அவர் சொன்னர்.

மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் அன்பழகன் பதில் அளிக்கையில் மருந்து வகைகளைத் தெளிப்பதன் மூலம் கொசுக்களை அழித்துவிட முடியாது என்று அரசு தீர்மானித்துள்ளதாகவும, ஆகவே புது ஆராய்ச்சி நடத்தப்பட்டுள்ளதாகவும கூறினர்.

ஆண் கொசுக்களை பெருமளவில் வளர்த்து, அவைகளில் இயல்பான சக்தியை மாற்றி அமைத்து, பெண் கொசுக்களிடம அனுப்புவதன் மூலம் பெண் கொசுக்கள் முட்டையிடுவதை நிறுத்திவிட முடியும என்றும அவர் தெரிவித்தார்.

---

## திடீர் கட்சித் தாவல்: தி. மு. க. எம். எல். ஏ. அ.தி.மு.க.வில்சேர்ந்தார்

**சென்னை, ஆக. 12—தி. மு. கழக எம்.எல்.ஏ. இளஞ்செழியன் திடீரென்று இன்று தி. மு. க.விலிருந்து விலகி, உடனே அ. தி.மு.க. வில் சேர்ந்தார்.**

திருச்சி மாவட்டம் விராலிமலைத் தொகுதியைச் சேர்ந்தவர் தி. மு, கழக எம.எல்.ஏ. இளஞ்செழியன். இன்று அவர் தி. மு. க. விலிருந்து விலகி உடனே அ. தி. மு. க.வில் சேர்ந்தார்.

இதுகுறித்து அவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் கடந்த 20 ஆண்டுகளாக, ஒரு தொண்டனுக என்னை இணைத்துக்கொண்டு பணியாற்றிவந்த, தி மு கழகத்திலிருந்து விலகி, இன்று முதல் அ. தி.மு,கழகத்தில்இணைந்து பணியாற்ற முடிவு செய்து, புரட்சித் தலைவர் அனுமதியுடன் ஒரு தொண்டனுக என்னை இணைத்துக்கொண்டுள்ளேன் என்று குறிப்பிட்டுள்ளார்.

### சட்டசபையில் வரவேற்பு

தி மு க விலிருந்து அ. தி. மு. க.வுக்கு கட்சி தாவியுள்ள விராலிமலை இளஞ்செழியன், இன்று சட்டமன்றத்திற்கு காலை 10-20 மணிக்குவந்தார் அவரை, கோவை அரங்கநாயகமும், குழ. செல்லையாவும் வரவேற்று அழைத்து வந்து தங்கள் கட்சியினர் அமரும் வரிசையில் அமர வைத்தனர்,

இளஞ்செழியன் உள்ளே நுழைந்தபோது அ. தி.மு.க. உறுப்பினர்கள் ஆரவாரம் செய்து வரவேற்றனர்.

## கருணாநிதி-சவுத்திரி சந்திப்பு

சென்னை, ஆக. 12— ஜனதிபதி தேர்தலில் எதிர்க் கட்சிகளின் வேட்பாளராகப் போட்டியிடும் திரிதீப் குமார் சவுத்திரி இன்று சென்னையில் கருணாநிதியை சந்தித்தார்.

---

### அறிவிப்பு

செவ்வாய்க்கிழமை நமது 'நவமணி' அலுவலகத்துக்கு வாராந்திர விடுமுறையாகையால், நாளை 'நவமணி' இதழ் வெளி வராது. 'நவமணி' அடுத்த இதழ் 14—8—74 மாலை சென்னையிலும் மறுநாள் வெளியூர்களிலும் கிடைக்கும்.

## விஷ ஊசி வழக்கு: இன்றைய விசாரணை

சென்னை, ஆக. 12—விஷ ஊசி வழக்கு விசாரணையில் இன்று போலீஸ் தரப்பு 100வது சாட்சியாக, அலூபுடன் தமிழ்நாடு டூரிஸ்ட் கம்பெனி பங்குதாரராக இருந்த கஜபதி நாயுடு என்பவர் சாட்சியமளித்தார்.

அடுத்து 101-வது சாட்சியாக, ஆந்திர மாநிலம் சித்தூர் அரசினர் மருத்துவமனையைச் சேர்ந்த டாக்டர் குப்தா விசாரிக்கப்பட்டார். அப்போது அவர் கூறியதாவது:—

23-7-71 அன்று ஒரு நபரின் உடல் பிரேத பரிசோதனைக்குக் கொண்டுவரப்பட்டது. 24—7—71 அன்று பிரேதபரிசோதனை செய்யப்பட்டது. அந்தநபரின் உடல் பாதிஎரிந்தும், பாதி அழுகியும்இருந்தது. மண்டை ஓட்டைத் திறந்து பார்த்தபோது மூளை உருகி இருந்தது. அந்த நபர் 15நாட்களுக்கு முன் இறந்திருக்க வேண்டும்

இவ்வாறு டாக்டர் குப்தா கூறினர். அவரை எதிரித் தரப்பு வக்கீல்கள் குறுக்கு விசாரணை செய்தனர். விசாரணை தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

---

அரிசி விலை உயர்வைக்

கண்டிப்பதற்காக வந்த

## காங்கிரஸ் ஊர்வலத்தில் கோஷ்டி சண்டை: ஆர்ப்பாட்டம் நின்றது

**சென்னை, ஆக. 12— அரிசி விலை உயர்வை எதிர்த்து இன்று கோட்டை எதிரே கண்டன ஆர்ப்பாட்டம் நடத்துவதற்காக வந்த பழைய காங்கிரஸ்காரர்களிடையே மோதல் ஏற்பட்டது. அதன் விளைவாக கண்டன ஆர்ப்பாட்டம் நடைபெறவில்லை.**

அரிசி விலை உயர்வுக்கு கண்டனம் தெரிவிக்கும் வகையில், தமிழ்நாடு சட்டசபை கூட்டம் நடக்கிற கோட்டை எதிரே ஆர்ப்பாட்டம் நடத்துவதற்காக, இன்று காலை ஏராளமான காங்கிரஸ்காரர்கள் ஊர்வலமாகச் சென்றபோது, கடற்கரையில்இரும்பு பாலம் அருகே ஊர்வலத்தினரை போலீசார் தடுத்து நிறுத்தினர்கள். அதற்கு அப்பால் கோட்டை நோக்கிச் சென்றால் தடை உத்தரவை மீறியதாக ஆகிவிடும் என்று ஊர்வலத்தினரிடம் போலீசார் தெரிவித்தனர்.

ஊர்வலத்துக்கு தலைமை தாங்கி வந்த தென் சென்னை மாவட்ட காங்கிரஸ் தலைவர் மணிவர்மா, வடசென்னை மாவட்ட காங்கிரஸ் தலைவர் ஆறுமுகம் ஆகியோர் பின்னர் கோட்டைக்குச் சென்று முதலமைச்சரைச் சந்தித்துப் பேசினர்கள்.

படி 4 ரூபாய் விலையில் அரிசியை மக்களுக்கு விநியோகம் செய்யவேண்டும் என்று வியாபாரிகளுக்கு அரசு உத்தரவிட்டிருப்பது தாங்க முடியாத விலை என்றும் ஆகவே குறுவை அறுவடை செய்யப்படும் வரையிலாவது இந்த விலையைக் குறைக்க வேண்டும் என்றும்முதலமைச்சரிடம் மணிவர்மா ஆறுமுகம் ஆகியோர் கோரினர்கள். ஆனல் தற்போதைய பொருளாதார நிலையில் விலை குறைப்பு சாத்தியம் இல்லை என்பதை அவர்களிடம் முதலமைச்சர் விளக்கியதாகத் தெரிகிறது.

முதலமைச்சரின் பதில் திருப்தி அளிக்கவில்லை என்றும், ஆகவே அடுத்த கட்ட போராட்டம் பற்றி சிந்திக்க வேண்டிய அவசியம் வந்துவிட்டது என்றும் ஆனல் இன்று தடை உத்தரவை மீறும் உத்தேசம் இல்லை என்றும் பின்னர் நிருபர்களிடம் மணிவர்மா கூறினர்.

அதைத் தொடர்ந்து மணிவர்மாவும், ஆறுமுகமும் இரும்பு பாலத்திற்குச்சென்று அங்கு நிறுத்தி வைக்கப்பட்டிருந்த காங்கிரஸ்காரர்களிடையே நிலைமையை விளககினர்கள். முதலமைச்சருடன் நடத்திய பேச்சு பற்றி மணிவர்மா விவரம் கூறினர். தற்போது தடை உத்தரவை மீற வேண்டியதில்லை என்று அவர் கூறிய யோசனையை கேட்டு, ஊர்வலத்தில் ஒரு பகுதியினர் திரும்பிவிட்டனர். மீதி இருந்தவர்களில் ஒரு பிரிவினர் உடனே தடை உத்தரவை மீற வேண்டும என்று கோரினர்கள். அதற்கு மற்றொரு பிரிவினர் எதிர்ப்பு தெரிவித்தனர்.

இந்த இரு பிரிவினரிடையே வாய்ச்சண்டை ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து பயங்கர மோதலும் ஏற்பட்டது.

ஆறுமுகம் சுமார் அரை மணி நேரம் பேசி சமாதானப் படுத்தினர். தடையை மீறி ஆர்ப்பாட்டம் நடத்தும் யோசனைகடைசியில்கைவிடப் பட்டது. ஆகவே ஆர்ப்பாட்டம் நடக்கவில்லை.

எதிர்க்கட்சி கூட்ட மேடையில் சம்பவம்:

# முத்துசாமிஎம்.பி.- கல்யாணசுந்தரம் பகிரங்க மோதல்

சென்னை, ஆக.12—விலைவாசி உயர்வைக்கண்டித்து எதிர்க்கட்சிகள் நடத்திய பொதுக்கூட்ட மேடையில், அ. தி. மு. க. எம். பி. முத்துசாமிக்கும், வலது கம்யூனிஸ்டு தலைவர் கல்யாணசுந்தரத்துக்கும் இடையே பகிரங்க மோதல் ஏற்பட்டது.

அண்ணா இருந்திருந்தால் ரூபாய்க்கு 3 படி அரசி போட்டிருப்பார் என்று முத்துசாமி கூறினார். இதற்கு கடும் எதிர்ப்புத் தெரிவித்த கல்யாணசுந்தரம் யார் இருந்தாலும் இப்போது ரூபாய்க்கு 3 படி அரிசிபோட முடியாது என்று முத்துசாமியைப் பார்த்துக் கூறினார்.

அரிசி விலை உயர்வைக் கண்டித்து நேற்று சென்னையில் எதிர்க்கட்சிகளின் கூட்டம் நடந்தது.

அந்தக் கூட்டத்தில் முத்துசாமி பேசும்போது கூறியதாவது:—

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பார் இலானும் கெடும்" என்பதால் நாம் இவர்களை இடித்துக் கோபமாக சொல்ல வேண்டியிருக்கிறது.

ஆட்சிக்கு வந்தால் ஆறே மாதத்தில் 3 படி "அரிசி போடுகிறோம்" என்று கூறி ஆட்சிக்கு வந்தார்கள் என்று அனந்தநாயகி கூறினார்.

அந்த வாக்குறுதியைக் கொடுத்தவர் அண்ணாவாகும். 1 படி திட்டத்தை அமுல்படுத்திய அவர், இன்று உயிரோடு இருந்தால் 3 படி அரிசி போட்டிருப்பார். கருணாநிதியை முதலமைச்சராக ஆக்கியதற்கு நாங்கள் பாவ மன்னிப்பு கேட்டுக் கொள்கிறோம்.

## அரசியலை விட்டு விலகுகிறேன்

15 ரூபாய்க்கு அரிசி இலங்கையில்விற்கிறது என்று போலீஸ் காவலுடன் வந்து பேசிவிட்டு ஒரு அமைச்சர் போயிருக்கிறார். அவர் தனியாக வந்து, அந்தமாதிரி சொல்லிவிட்டுப் போகட்டும். நான் அரசியலை விட்டே விலகுகிறேன்.

நேற்று இன்று நாளைதிரைப் படத்தை 20 ரூ. கொடுத்து டிக்கெட் வாங்கி பார்க்கும் பொழுது, அதிக விலை கொடுத்து அரிசி வாங்க முடியாதா என்று மற்றொருவர் கேட்கிறார்.

இவர்கள்தானே போட்டி போட்டுக்கொண்டு விளம்பரபடுத்தினார்கள். பார்க்கவேண்டும் என்று எல்லோருக்கும் ஆசை வராதா? ஏன் காமராஜரும் கருணாநிதியும் கூட ஒரு நாளைக்கு பார்க்கத்தான் போகிறார்கள்.

பதுக்கல்காரர்களை ஒழித்தால்தான் நம் ஆட்சி நீடிக்கும் என்று மற்றவர்கள் எடுத்துக் கூறாமல் ஒத்து ஊதிக் கொண்டிருக்கிறார்கள். அந்த நாதஸ்வரக்காரர் வேறு ஒத்து ஊதுபவரை மாற்றிக் கொள்ளப்போகிறார்.

## கவர்னர் மீது கடும் தாக்கு

ஆளுநர் ஷா இதுபற்றி மத்திய அரசுக்கு எடுத்துரைக்க வேண்டும். ஆனால் அவரோ ஒரு பள்ளிக்கூட விழாவில், "இங்கு படித்து வரும் ஒவ்வொரு மாணவனும், கருணாநிதிபோல் வர வேண்டும் என்று கூறியிருக்கிறார்.

பசிக்கு வலுவில்லாதவன் எச்சில் இலைக்கு ஓடுகிறான். அரிசி பஞ்சம் ஏற்பட்டதனால் மக்கள் பதுக்கலை கைப்பற்றுகின்றனர்.

இந்த மாதம் மதுவிலக்கை அமுல் செய்வார்களோ இல்லையோ எனக்கு சந்தேகமாகத்தான் இருக்கிறது. திடீரென்று சாராயக் கடைகளை மூடுவதனால், ஏலம் எடுத்தவர்கள் முதலமைச்சரிடம் முறையிட்டுக் கொண்டதாகவும், அமைச்சர் கோர்ட்டுக்கு போகும்படி அவர்களுக்கு சொல்லியிருப்பதாக கேள்விப்பட்டேன். நான் அடிப்பது போல் அடிக்கிறேன். நீங்கள் அழுவதுபோல் அழுங்கள் என்று அவர்களிடம் நடந்து கொள்கிறார்.

இங்கு நிறைவேற்றியிருக்கும் தீர்மானங்களைவிரைவாக அமுல்படுத்த அரசு தவறு

மானால் நிச்சயம் போராட்டம் வெடிக்கும். இவ்வாறு முத்துசாமி கூறினார்.

## கல்யாணசுந்தரம் பேச்சு

அக் கூட்டத்தில் இந்திய கம்யூனிஸ்ட்தலைவர் கல்யாணசுந்தரம் பேசியதாவது:—

அண்ணா இருந்தால் 3 படி அரிசி போட்டிருப்பார் என்று முத்துசாமி கூறினார். அவருடைய எண்ணத்தைப் பாராட்டுகிறேன். ஆனால் அண்ணா இல்லை, வேறு எவராக இருந்தாலும் 3 படி அரிசி இப்பொழுது போட முடியாது. அதனால் தான் 2 ரூபாய்க்கு 1 படி அரிசி போடவேண்டும் என்று தீர்மானம் போட்டிருக்கிறோம்.

கருணாநிதி எதிர்க்கட்சியாக இருந்தால் 75 காசுக்கு ஒரு படி அரிசி போடுங்கள் என்று கேட்பார். ஆனால் அவரால் அப்படி கேட்க முடியாது.

நாங்கள் கொடுத்த மகஜர் காலாவதியாகிவிட்டதாக யாரும் நினைக்க வேண்டாம். கருணாநிதி ஜனாதிபதிதேர்தலில் பகருதீன் அலிக்கு ஓட்டு போட்டுவிட்டால் எல்லாம் சரியாகிவிடும் என்று நினைக்கவேண்டாம்.

இன்று கருணாநிதி அரிசி வேறு, அரசியல் வேறு என்று கூறுகிறார்.

உண்ண உணவும் உடுக்க உடையும் கொடுக்கவேண்டியது ஒரு அரசின் கடமை.

## காங்கிரசுக்கு அழைப்பு

சென்னை நகர தொழிலாளர்கள்மீது எனக்கு ஒருகுறை உண்டு. நீங்கள் காமராஜர் ஊர்வலத்திற்கு 5 லட்சம் போங்கள், அதேபோல அனைத்து கட்சிகளும் கருணாநிதி ஆட்சியை எதிர்த்து போராடும்பொழுது, நீங்களும் சேர்ந்துகொள்ளவேண்

3-ம் பக்கம் பார்க்க

அனந்தநாயகி யோசனை:

## 'மண் எண்ணை கியூவில் மந்திரிகள் மனைவி'

இக்கூட்டத்தில் அனந்தநாயகி பேசியதாவது:—

அவர்கள் அரிசி வேறு, அரசியல் வேறு என்று பேசுகிறார்கள். இன்று அரிசிதான் எல்லா அரசியல் கட்சிகளையும் ஒன்று சேர்த்து இருக்கிறது. அரிசி கேட்டால் சுடுகாட்டிற்கு செல்லும் நிலை வந்திருக்கிறது.

வாட்டர்கேட்டினால் நிக்சன் ராஜினாமா செய்ததுபோல் கருணாநிதியை ராஜினாமா செய்யவிடக் கூடாது. இவர்களுடைய சொத்துகளை பிடுங்கிக் கொண்டு 10 காசு கூட இல்லாமல் சந்தியில் நிற்க வேண்டும். மந்திரிகளுடைய மனைவிகள் மண்ணெண்ணைக்காக வரிசையில் நிற்க வேண்டும்.

அரிசிப் பிரச்சினையை வைத்துதானே இவர்கள் ஆட்சிக்கு வந்தார்கள். 6 மாதத்தில் 3 படி அரிசி போடுவோம் என்று கூறவில்லையா? கருணாநிதியும், அவருடைய தொண்டர்களும் கடத்தல், பதுக்கல், லஞ்சம் இவற்றில் டாக்டர் பட்டம் பெற்றவர்கள்.

எல்லையிலே சுங்கச்சாவடி இருப்பதாக சொல்கிறார்களே அவையெல்லாம்லஞ்ச சாவடிகள். கொள்ளையடிக்கும் அதிகாரிகளும், வியாபாரிகளும், அரசியல்வாதிகளும் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள்.

அரிசிப் பிரச்சினையில் தீர்வு காணமுடியாவிட்டால், அமைச்சர்கள் தங்கள் சொத்துக்களை நாட்டு மக்களுக்கு எழுதி வைத்துவிட்டு, ஆட்சியைவிட்டு இறங்க வேண்டும்.

இவ்வாறு அனந்தநாயகி பேசினார்.

## இரண்டு ரூபாய்க்கு படி அரிசி போடுக: சர்வகட்சி கோரிக்கை

சென்னை, ஆக. 12—ஒரு படி அரிசி இரண்டு ரூபாய் விலையில் சப்ளை செய்ய வேண்டும் என்று நேற்று சென்னையில் நடைபெற்ற சர்வகட்சி பொதுக்கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இந்த விலையில் வாரத்தில் ஒருவருக்கு 2 படி அரிசி கொடுக்க வேண்டும் என்றும் அந்தத் தீர்மானம் அரசைக் கேட்டுக் கொண்டது.

அரிசி விலை உயர்வை எதிர்த்து அ. தி. மு. க. தலைமையிலான சர்வ கட்சியினர் தமிழகத்தின் பல இடங்களிலும் 10-ம் தேதி கண்டனக் கூட்டங்களை நடத்தினர்.

சென்னையில் இந்தக் கூட்டம் நேற்று நடைபெற்றது. புரசைவாக்கம்மூக்காத்தாள் தெருவில் நடைபெற்ற இந்த கூட்டத்துக்கு அ. தி. மு. க. அவைத் தலைவர் மா. முத்துசாமி தலைமை வகித்தார்.

கூட்டத்துக்கு தலைமை வகிக்குமாறு முத்துசாமியின் பெயரை முதலில் சக்திதாசன் (குடியரசுக் கட்சி) முன்மொழிந்தார்.

டி. என். பி. கே. பெருமாள்சாமி (ராஜாஜி சுதந்திரா) பி. சிவசங்கரன் (தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றச் சங்கம்)மார்க்கபந்து (உழைப்பாளர் ஜெனநாயக நவக்

கட்சி) பி. ஏ. எஸ். அப்துல் காதர் (தமிழ்நாடு முஸ்லிம் லீக்)ஆகியோர் வழிமொழிந்து பேசினர்.

பிறகு முத்துசாமி தலைமையேற்று தீர்மானத்தைப்பிடித்தார்.

அரிசி நெருக்கடிக்கு தமிழக அரசின் உத்தரவுகளே காரணமென்றும், பல மாவட்டங்களிலும் அறப்போராட்டங்களில் ஈடுபட்ட தொண்டர்கள் கைதுசெய்யப்படுகிறதாகவும் தீர்மானத்தில் குற்றஞ்சாட்டப்பட்டிருந்தது.

படி அரிசி இரண்டு ரூபாய் விலையில் வாரத்தில் ஒருவருக்கு 2 படி அரிசி சப்ளை செய்ய வேண்டுமென்றும் தீர்மானம் அரசைக் கேட்டுக் கொண்டது.

கூடியிருந்த மக்கள்

5-ம் பத்தி பார்க்க

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஆக. 12—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 525 00

(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 49 75

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1165 00

உள்ளூர் 1085 00

(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 75

**மணிலாப்பயறு**

மாரிகால பட்டாணி தீரவில்லை

மொத்த விலை தீரவில்லை

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 685 00

சில்லரை விலை ரூ. 7 50

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 610 00

சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 96 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 197 00

முதல் ரூ. 200 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 153 00

விற்பனை வரி தனி

சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 25

**கடலைப்பிண்ணாக்கு**

கி.கி. கொண்ட மூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லா ரூ. 85 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 423 00

முதல் ரூ. 425 00

## தி. மு. க. மகளிர் ஆலோசனைக் கூட்டம்

சென்னை, ஆக. 12— வட சென்னை தி. மு. க. மகளிர் அணி அமைப்பாளர் அமுதா ராகவன் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

தலைமை கழக அறிவிப்புக்கு ஏற்ப செப்டம்பர் மாதம்15-ந் தேதிமுதல் கொண்டாடப்படவிருக்கும் முப்பெரும்விழாவில் கழக தாய்மார்கள் பெருவாரியாக பங்கு கொண்டு சிறப்பிக்கும் வகையில் கலந்து பேசுவதற்காக 14-8-74 புதன் பிற்பகல் 3 மணி அளவில், சென்னை அண்ணா சாலையில் உள்ள தி. மு. க. சட்டமன்ற கட்சி அலுவலகத்தில் தலைமை கழக மகளிர்அணி செயலாளர் அலமேலு அப்பாதுரை தலைமையில் ஆலோசனை கூட்டம் நடைபெறும்.

ஆலோசனை கூட்டத்திற்கு வடசென்னை தி.மு.க. மகளிர் அணி உறுப்பினர்கள் அனைவரும் கலந்து கொண்டு ஆலோசனைகள் கூறி சிறப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமுதா ராகவன் அறிவித்து உள்ளார்.

## சேலம் எக்கு ஆலையில் 1600 பேருக்கு வேலை

சென்னை, ஆக. 12—சேலம் எக்கு ஆலைத் திட்டத்தின் முதலாவது கட்டம் பூர்த்தி அடைந்தால் 1561 பேருக்கு வேலை கிடைக்கும் என்று சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது தொழில் அமைச்சர் மாதவன் அறிவித்தார். இந்த முதலாவது கட்டம் எப்போது பூர்த்தியாகும் என்பது மத்திய அரசைப் பொருத்து இருக்கிறது என்றும் அவர் கூறினார்.

என்ஜினியர்கள் ஸ்டிரைக் எதிரொலி

## நெய்வேலியில் மின் உற்பத்தி நின்றது: ஆலைகள் மூடப்பட்டன

நெய்வேலி, ஆக. 12—நெய்வேலியில் ஜூனியர் என்ஜினியர்களும், மற்றும் தொழில் நுட்ப சிப்பந்திகளும் வேலை நிறுத்தம் மேற்கொண்டதால் நெய்வேலி அனல் மின் நிலயம் உர ஆலை, லீக்கோ ஆலை ஆகிய அனைத்தும் மூடப்பட்டுள்ளன.

நெய்வேலியில் பழுப்புநிலக்கரியை வெட்டி எடுக்கும் வேலையும் நிறுத்தப்பட்டுள்ளது.

இதுவரை தமிழ்நாடு மின் சப்ளை இணைப்புக்கு 250முதல் 350 மெகாவாட் மின்சாரம் சப்ளை செய்துவந்தநெய்வேலி அனல் மின்சார நிலையம் மூடப்பட்டு விட்டதால் அங்கு அத்தியாவசியப் பணிகள் நடைபெற இப்போது தமிழ்நாடு மின் இணைப்பிலிருந்து நெய்வேலிக்கு 20 மெகாவாட் மின்சாரம் அளிக்கப்பட்டு வருகிறது.

### பாதிப்பு இல்லை

நெய்வேலி அனல் மின் நிலையத்திலிருந்து மின்சாரம் கிடைப்பது நின்றுவிட்டதால் தமிழ்நாட்டில் மின்சார சப்ளை நிலை பாதிக்கப்படமாட்டாது என்று தமிழ்நாடு மின் வாரியத் தலைவர் எம். ஜி. ராஜாராம் கூறினார். தமிழ்நாட்டில்கடந்ததிங்கட்கிழமையிலிருந்து மின்சார வெட்டு 40 சதவிகிதத்திலிருந்து 30 சதவிகிதமாகக் குறைக்கப்பட்டது நினைவிருக்கலாம்.

ஏற்கெனவே வேலை நிறுத்தம் செய்துவரும் ஜூனியர் என்ஜினியர்களுக்கும் இதர சிப்பந்திகளுக்கும் ஆதரவாக உதவி என்ஜினியர்கள் "விதிப்படி வேலை" செய்ய ஆரம்பித்ததால் எல்லா ஆலைகளையும் மூட நேரிட்டதாக நெய்வேலி பழுப்பு நிலக்கரிக் கார்ப்பரேஷனின் தலைவரான எஸ். யக்ஞேஸ்வரன் கூறியுள்ளார்.

நிர்வாகத்தினருடனும், என்ஜினியர்களுடனும் சென்னையில் நடத்திய பேச்சுகள்தோல்வியடைந்துவிட்டன என்றும், ரூ. 85 சம்பள உயர்வு கொடுக்க நிர்வாகத்தினர் முன்வந்ததை என்ஜினியர்கள் நிராகரித்துவிட்டனர் என்றும் லேபர் கமிஷனர் ஜி. கமலரத்தினம் கூறினார்.

ஜூனியர் என்ஜினியர் சங்கத் தலைவர் பண்டரிநாதன் உட்பட 7 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

தென் ஆற்காடு மாவட்ட கலெக்டரும், மாவட்ட போலீஸ் அதிகாரியும் நெய்வேலியில் முகாமிட்டுள்ளனர். அங்கு நிலைமை அமைதியாக உள்ளதாகக் கூறப்படுகிறது.

3-ம் பத்தி தொடர்ச்சி

கையொலி எழுப்பியதன் மூலம் தீர்மானத்துக்குத் தங்கள் ஆதரவைத் தெரிவித்தனர்.

ஆரம்பத்தில் பேசிய சக்திதாசன், இன்னும் 10 நாட்களில் கருணாநிதி வீட்டு முன்பானை உடைப்பு போராட்டம் நடத்தப் போவதாக அறிவித்தார்.

பழைய காங்கிரஸ், அல்லது தி. மு. க. வைச் சேர்ந்தவர்கள்தான் அரிசியை பதுக்கிவைப்பதாக டி. என். பி. கே. பெருமாள்சாமி குற்றஞ்சாட்டினார்.

பி. சிவசங்கரன் பேசுகையில், முன்பு அண்ணா ரூபாய்க்கு படி அரிசி போடவேண்டும் என்று சொன்னபோது 8 கோடி ரூபாய் நஷ்டம் வரும் என்று கூறி அதைத் தடுக்க முயன்றவர் கருணாநிதி என்று கூறினார்.

கட்டாய சேமிப்புக்கு எதிர்ப்பு:

## துப்பாக்கி சூடு: 3 ஊழியர் மரணம்

ஜெய்ப்பூர், ஆக. 12—தொழிற்சாலைகளில் வேலை பார்ப்பவர்களுக்கு கூடுதலாக சம்பள உயர்வு கொடுத்தால் அதில் பாதியை கட்டாய சேமிப்புத் திட்டத்திற்காகக் கொடுக்க வேண்டும் என்று டெல்லி சர்க்கார் உத்தரவிட்டு இருக்கிறது. இதற்கு ராஜஸ்தான் மாநிலம் பரத்பூர் நகரில் உள்ள சரக்கு ரெயில் பெட்டி தொழிற்சாலை ஊழியர்கள் பலத்த எதிர்ப்பு தெரிவித்தனர். கூடுதலாக கிடைக்கும் சம்பள உயர்வு முழுவதையும் கொடுக்க வேண்டும் என்று கூறி அதிகாரிகளை முற்றுகை போராட்டம் (கேரா) செய்தனர்.

கூட்டத்தை கலைப்பதற்காக போலீசார் துப்பாக்கி சூடு நடத்தினார்கள். இதில் 3 பேர் செத்தனர். 2 பேர் காயம் அடைந்தனர்.

## சட்ட மன்றத்தில் அமைச்சர்கள் வரிசையில் மாறுதல்

சென்னை, ஆக. 12—சி. வி. எம். அண்ணாமலையும், ராசாங்கமும் அமைச்சர்களாக நியமிக்கப்பட்ட பின், சட்டமன்றத்தில்அமைச்சர்கள் அமரும் வரிசை பின் வருமாறு மாற்றியமைக்கப்பட்டுள்ளது.

முதலமைச்சர் கருணாநிதி, நெடுஞ்செழியன், அன்பழகன், என். வி. நடராசன், ப. உ. சண்முகம, மாதவன், சாதிக்பாட்சா, ஆதித்தனார், அன்பில் தர்மலிங்கம, மன்னை நாராயணசாமி, ராசாராம, சி. வி. எம. அண்ணாமலை. ஓ. பி ராமன், பண்ருட்டி ராமச்சந்திரன், கண்ணப்பன் ராசாங்கம.

இந்த வரிசைப்படி 16 அமைச்சர்களும இன்று சட்டமன்றத்தில்அமர்ந்திருந்தனர்.

## திருப்பூர் மொய்தீன் பொதுவாழ்வு பொன்விழா

சென்னை, ஆக. 12—தமிழ்நாடு சட்டமன்ற முஸ்லிம் லீக் கட்சித் தலைவரும் மாநில முஸ்லிம் லீக் துணைத் தலைவருமான திருப்பூர் ஏ. எம். மொய்தீனின் பொதுவாழ்வு பொன் விழா ஆக. 14-ந் தேதி மாலை 5 மணிக்கு சென்னைகலைவாணர் அரங்கில் நடைபெறும்.

மேலவைத் தலைவர் சி. பி. சிற்றரசு விழாவுக்கு தலைமை வகிப்பார். முதலமைச்சர் கருணாநிதி விழாவில் கலந்து கொண்டு மொய்தீனுக்கு பொன்னாடை போர்த்தி பாராட்டுவார்.

மற்றும், ம. பொ. சி. அப்துல் வகாப் ஜானி; அப்துஸ் சமது, பொன்னப்ப நாடார், கே. டி. கே. தங்கமணி, அனந்தநாயகி, எச். வி. ஹாண்டே, மணலி கந்தசாமி ஆகியோரும் கலந்துகொள்வார்கள்.

மில் ஊழியர்கள் மீது தாக்குதல்;

கல்யாணசுந்தரத்துக்கு தந்தி:

## புதுவை அ. தி. மு. க.- வலது கம்யூனிஸ்டு கூட்டணியில் பிளவு

புதுவை, ஆக. 12—புதுவை அ. தி. மு. க.-வலது கம்யூனிஸ்டு கூட்டணியில் கடும்பிளவு ஏற்பட்டுள்ளது. இது குறித்து புதுவை அ. தி. மு. க. தலைவர் ஒருவர் வ. கம்யூ. தலைவர் கல்யாணசுந்தரத்துக்குத் தந்தி அனுப்பியுள்ளார்.

இது பற்றிய விவரம் வருமாறு:—

சீனியாரிட்டி அடிப்படையில் வேலை உயர்வு கொடுக்க வேண்டும் என்று கூறி, இங்குள்ள ரோடியர் மில்லில் சுமார் 7 ஆயிரம் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர். இந் நிலையில் மில் நிருபர்கள், தங்களுக்கு வேண்டிய வ. கம்யூனிஸ்டு தொழிலாளர் மூவருக்கு வேலை உயர்வு கொடுத்துள்ளதாகக் கூறப்படுகிறது.

இதைத் தொடர்ந்து தொழிலாளர் நல அதிகாரி முன்னிலையில் பேச்சு நடந்தும் பயனளிக்கவில்லை.

இதற்கிடையில், அ.தி. மு. க. தொழிற்சங்கத் தலைவர் ராகவானந்தம் வ. கம்யூனிஸ்டுக் கட்சியை ஆத்திரமூட்டும் வகையில் குறைகூறி பேசியதாகக்கூறப்படுகிறது.

அன்றைய தினமே மில் இயங்கவேண்டும் என்றும், அதற்கு தாங்கள் ஒத்துழைப்பதாகவும் வ. கம்யூனிஸ்டு தொழிலாளர்கள் கூறியதாகவும் வ. கம்யூனிஸ்டுத் தொழிலாளர் வேலைக்குத் திரும்புவதைக் கண்டு அ. தி. மு. க. தொழிலாளர்கள் மோதலில்இறங்கியதாகவும், இசக்கிமுத்து, சுப்பிரமணியன் அதை இரு வலது கம்யூனிஸ்டு தொழிலாளர்கள் தாக்கப்பட்டதாகவும்கூறப்படுகிறது.

தமிழ்நாடு வ. கம்யூனிஸ்டு கட்சி செயலாளர் கல்யாணசுந்தரத்துக்கு இது சம்பந்தமாக புதுவை அ. தி. மு. க. தலைவர்களில் ஒருவர் தந்தி கொடுத்திருப்பதாகத் தெரிகிறது.

வலதுகம்யூனிஸ்டுதொழிலாளர்கள் முதலாளிக்கு ஆதரவு கொடுப்பதை நிறுத்துமாறு தமதுகட்சித்தொழியாளர்களை கல்யாணசுந்தரம் வற்புறுத்த வேண்டும் என்று அந்தத்தந்தியில் கூறப்பட்டிருக்கிறது.

இந்த மோதலின் விளைவாக வலது கம்யூனிஸ்டு-அ.தி.மு.க கூட்டில் பெரும் பிளவு ஏற்பட்டிருக்கிறது. மேலும். வரப்போகும் தேர்தலில் இரு கட்சிகளின் கூட்டு நிலைக்குமா என்பதுசந்தேகமாகஉள்ளது.

இது குறித்து வலது கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த டாக்டர் ரங்கநாதன் கூறுகையில். "அ. தி. மு. க. - வலது கம்யூனிஸ்டு தொழிலாளர்களிடையே பிளவு இருந்தாலும் அரசியல் உறவு பாதிக்கப்படாது என்றார்.

அ.தி.மு.க. வைச் சேர்ந்த சி. என். பார்த்தசாரதி, இது பற்றி கூறுகையில், தலைமைக் கழகம் தான் இது சம்பந்தமாக முடிவு எடுக்க வேண்டும். மில் தொழிலாளர் பிரச்சினையில் கம்யூனிஸ்டுகளின் போக்கு சரியில்லை என்றார்.

## மந்திரி கார் மீது காலிடப்பா வீச்சு

பம்பாய், ஆக. 12—மராட்டிய மந்திரியின் கார் மீது ஜனசங்கத்தினர் செருப்புகளையும் காலி மண் எண்ணை டப்பாக்களையும் வீசினார்கள். இதனால் இந்திரா காங்கிரசாருக்கும் ஜனசங்கத்தினருக்கும் இடையே மோதல் ஏற்பட்டது.

பம்பாயில் உணவு பொருட்கள், மண்எண்ணை ஆகியவற்றுக்கு கடும் தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது. இவற்றை போதிய அளவு சப்ளை செய்யக் கோரி எதிர்க்கட்சியினர் கிளர்ச்சி நடத்திவருகிறார்கள். நேற்றைய தினம் மத்திய பம்பாயில் ஒரு கூட்டுறவு பாங்கியின் கிளையை திறந்துவைக்க, மராட்டிய நீர்ப்பாசனமந்திரி வி. டி. பட்டீல் சென்றார். இந்த கூட்டுறவு பாங்கி, இ. காங்கிரஸ் ஆதரவு பெற்ற தலைச்சுமை வியாபாரிகளால் நடத்தப்படுவதாகும்.

மந்திரியின் கார் சென்றபோது, ஜனசங்கத்தினர் அதை சூழ்ந்து கொண்டு கறுப்புக்கொடி காட்டி ஆர்ப்பாட்டம் நடத்தினர்கள்.

மந்திரியின் கார் மீது செருப்பு, காலி மண் எண்ணை டின், கறுப்புக் கொடி ஆகியவற்றை வீசினார்கள்.

இதைத் தொடர்ந்து இ. காங்கிரசாருக்கும் ஜனசங்கத்தினருக்குமிடையே மோதல் ஏற்பட்டது. ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டார்கள்.

நிலைமை மோசம் அடைந்ததால், கூட்டத்தைக் கலைக்க போலீசார் தடியடி நடத்தினார்கள்.

இந்த தடியடியில், பம்பாய் மாநகராட்சி பெண் உறுப்பினர் ஒருவர் உள்பட 11 பேர் காயம் அடைந்தனர்.

## பகிரங்க மோதல்

2-ம் பக்கம் தொடர்ச்சி

டும். மாணவர்களும், தொழிலாளர்களும் ஒன்று திரண்டு விட்டாலே போதும்.

நாம் தொடர்ந்துபோராடி இருந்தால் இந்த ஆட்சி இருந்திருக்காது. விலைவாசிஏற்றம், மலையாள பிரச்னை வேலையில்லாத் திண்டாட்டம் முதலியவை இருந்திருக்காது.

இன்னும் சில தினங்களில் எல்லா கட்சிகளும் சேர்ந்து போராட்டம் நடத்த இருக்கிறார்கள். அனைவரும் போராட்டத்தில் பங்கு கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இவ்வாறு கல்யாணசுந்தரம் பேசினார்.

## கோவை செழியன் ஆவேசப் பேச்சு

இக்கூட்டத்தில் கோவை செழியன் எம்.எல் ஏ. பேசியதாவது:

நீங்கள் பசியோடு கோபமாக இருக்கிறீர்கள்.

உங்கள் கோபம் கோபாலபுரத்தை நோக்கியும் செல்லலாம், கோட்டையை நோக்கியும் செல்லலாம். நிச்சயம் பார்த்து கருணாநிதி ஆட்சியை விட்டு இறங்குவார் என்று நாம் எதிர்பார்க்க முடியாது. அமெரிக்காவின் உதவி ஜனாதிபதி ... முதல் காரணமாக பதவி துறந்து நம் அமைச்சர்களில் சிலர் அமெரிக்கா சென்று வந்ததே காரணம் என்று சொல்கிறார்கள்.

பிரெஞ்சு நாட்டில் ஏற்பட்டதுபோல ரத்தப் புரட்சி இங்கு ஏற்பட்டுவிடக்கூடாது என்று அஞ்சுகிறேன். "மக்கள் குரல், மகேசன் குரல் கேட்காது" என்று கருணாநிதி வசவம் எழுதியிருக்கிறார். உங்களுடைய குரல் அவருக்கு கேட்காது.

தமிழ்நாடு முழுவதும் அரசு அலுவலகங்கள் மற்றவைகளும் செயல்படாமல் போக நேரிடும். நம்பிக்கையில்லா தீர்மானம் சட்டசபையில் கொண்டுவரப் போகிறோம். அது தோற்றுவிடும். நீங்கள் தி மு க சட்டமன்ற உறுப்பினர்களை வெளியில் நடமாடவிடக்கூடாது. அவர்களை நடமாட விடமாட்டோம் என்ற உங்கள் குரலைக் கேட்டு கருணாநிதி ராஜினாமா செய்யவேண்டும்.

இவ்வாறு கோவை செழியன் கூறினார்.

"திடீர் சாதம்" கண்டுபிடிப்பு

## வெந்நீரை ஊற்றினல் போதும்: 3 நிமிஷத்தில் சோறு தயார்

டோக்கியோ, ஆக. 12—"திடீர் ரசம்" "திடீர் சாம்பார்" வரிசையில் இப்போது "திடீர் சாதம்" கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. கடையிலிருந்து "திடீர் சாதம்" பொட்டலத்தை வாங்கி அதை பாத்திரத்தில் போட்டு வெந்நீரை ஊற்றினல் போதும். 3 நிமிஷத்தில் சாப்பிடுவதற்கு சோறு தயாராகிவிடும்.

இந்த "திடீர் சாதம்" ஜப்பானில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

அரிசியில் கல் பொறுக்க வேண்டிய வேலையில்லை; அரிசியைக் களைய வேண்டிய வேலையில்லை. அதை உலையில் போட்டு வெந்து விட்டதா என்று கிண்டிப்பார்க்கத் தேவையில்லை.

அடுப்பு சரியாக எரிகிறதா என்று பார்க்க வேண்டிய வேலையில்லை. பின்னர் கஞ்சி வடிக்கவேண்டிய வேலையும் இல்லை.

திடீர் சாதத்தை வாங்கி சோறாக்குவதில் பெண்களுக்கு மேலே கூறிய எந்த வேலையும் இராது.

இந்தியாவிலும், மற்றும் பல வேறு ஆசிய நாடுகளிலும் பெண்களின் சமையல் வேலையை மிக எளிதாக்கும் இந்த திடீர் சாதத்தை ஜப்பானிய கம்பெனி ஒன்று கண்டுபிடித்துள்ளது.

அக்கம்பெனி திடீர் சாதத்தைக் கடைகள்மூலம் விற்க அத்தாரிப்பு முறைகளும், ... 13 நாடுகளில் பேடண்ட் கோரியுள்ளது.

திடீர் சாதம் எப்படி இருக்கும்? அது கையில் ஒட்டுமா?

அது எப்படி தயாரிக்கப் படுகிறது?

### கையில் ஒட்டாது

தொழிற்சாலையில் அரிசியை மிக உயர்ந்த வெப்பத்தில், மிகுந்த அழுத்தத்தில் வேகவிடுகிறார்கள். அது வெந்த பிறகு சாதத்தை எடுத்து, ஒரு உத்தியைக் கையாண்டு யந்திரமூலம்உலரச்செய்கிறார்கள். பின்னர் அதைப் பாதுகாப்பாக பொட்டலங்களில் போட்டுவிடுவார்கள். எனவே திடீர் சாதம் கையில் ஒட்டும் வகையில் இராது. திடீர் சாதம் கையில் ஒட்டாத தன்மை கொண்டதாக ஈரப் பசையற்ற பருக்கைகள் வடிவில் இருக்கும்.

சாதாரணமாக அரிசியைப் பாத்திரத்தில் போட்டு வேக வைக்கும்போது சாதத்தில் ஒரு பகுதி சரியாக வேகாமல் இருக்கலாம். ஆனால் திடீர் சாதத்தின் பருக்கைகள் அனைத்தும் சரியாக நன்கு வெந்தவையாக இருக்கும்.

### 3 நிமிஷத்தில் தயார்

திடீர் சாதம் பொட்டலத்தைக் கடையில் வாங்கி, அதை ஒரு பாத்திரத்தில் போட்டு வெந்நீரை காய்ச்சி அப்பாத்திரத்தில் ஊற்றினால் போதும். மூன்று முதல் ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு சோறு சாப்பிடுவதற்குத் தயாராகி விடும்.

திடீர் சாதத்தை வாங்கிப் பயன்படுத்துவதால் பெண்களுக்கு சமையலில் நேரம் குறையும். சாதாரண முறையில் சாதம் வடிப்பதற்கு விறகு, கிரசின், அல்லது காஸ் ஆகியவற்றுக்கு ஆகும் செலவும் குறையும்.

### 2 ஆண்டுவரை கெடாது

திடீர் சாதத்தை வாங்கி வீட்டில் வைத்தால் அது கெட்டுவிடாது. சாதாரணமாக அதை 2 ஆண்டுவரை வைத்திருக்கலாம்

புதிதாக அறுவடை செய்யப்பட்ட அரிசியை கொண்டு சாதம் வடித்தால் அது குழைந்துவிடும். ஆனால் புதிய அரிசியைக் கொண்டு திடீர் சாதம் தயாரிக்க முடியும். பழைய அரிசியையும் திடீர் சாதமாகத்தயாரிக்கமுடியும்.

பெண்கள், அதுவும் குறிப்பாக வேலைபார்க்கும் பெண்கள் திடீர் சாதத்தை நிச்சயம் வரவேற்பர். அதே நேரத்தில் ஓட்டல்கள், பள்ளி மாணவருக்கு மதிய உணவு தயாரிக்கும் நிலையங்கள், ஆஸ்பத்திரிகள், ராணுவத்தைச் சேர்ந்த உணவுத் தயாரிப்பு காண்டீன்கள். ஆகியவற்றுக்கும் திடீர்சாதம் மிகவும் வரவேற்கத்தக்கதாக இருக்கும்.

திடீர் சாதத்தைக் கண்டு பிடித்துள்ள ஜப்பானிய நிஷின் கம்பெனி திடீர் சாதத்துக்கு பிரமாத கிராக்கி இருக்கும் என்று எதிர்பார்க்கிறது.

13 நாடுகளில் பேடண்ட் பெற அக்கம்பெனி விண்ணப்பித்துள்ளது. தினமும் 50 டன் திடீர் சாதம் தயாரிப்பதற்கான ஆலையை அது அமைத்து வருகிறது. 50 டன் திடீர்சாதம் 50 ஆயிரம் பேர் சாப்பிடுவதற்குப் போதுமானது.

## கர்நாடக மாநிலத்திலும் மின்வெட்டு தளர்ந்தது

பெங்களூர், ஆக. 12—கர்நாடக மாநிலத்தில் இது வரை 40 சதவிகிதமாக இருந்த மின்வெட்டு 30 சதவிகிதமாகக் குறைக்கப்பட்டு உள்ளது.

இத்தகவலை மாநில மின்சார அமைச்சர் எச். எம். சென்னபாசப்பா தெரிவித்தார்.

லிங்கனமக்கி அணையில் நீர் மட்டம் உயர்ந்துள்ளதே இதற்குக் காரணமாகும்.

## கச்சத்தீவில் இந்திய தேசிய கொடி: பிரதமருக்கு கடிதம்

சென்னை, ஆக. 12—பிரதமர் இந்திரா காந்திக்கு நல்லசிவம் (பழைய எம். எல். ஏ.) எழுதியுள்ள கடிதத்தில், "ஆகஸ்டு 15-ந்தேதி சுதந்திர தினத்தன்று கச்சத்தீவுக்கு சென்று. இந்திய தேசிய கொடியை ஏற்றுவோம்" என்று குறிப்பிட்டு உள்ளார்.

தமிழ்நாட்டுக்கு சொந்தமானதும், முன்பு ராமநாதபுரம் ராஜாவின் ஆளுகைக்கு உட்பட்டு இருந்ததுமான கச்சத்தீவை, இலங்கைக்கு டெல்லி சர்க்கார் தானம் செய்ததை எதிர்த்து, போராட்டம் நடைபெறுகிறது.

தமிழ்நாடு சட்டசபை முன்னாள் உறுப்பினரும், சோஷலிஸ்டு கட்சி தலைவருமான நல்லசிவம், இந்த போராட்டத்தை முன் நின்று நடத்துகிறார்.

இது குறித்து பிரதமர் இந்திரா காந்திக்கு அவர் ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்.

### சட்டவிரோதம்

அதில் அவர் கூறி இருப்பதாவது:—

இந்தியாவின் ஒரு பகுதியான கச்சத்தீவை, இலங்கைக்கு தூக்கிக் கொடுத்ததைக் கண்டித்து, தமிழ்நாடு சோஷலிஸ்ட் கட்சி ஏற்கனவே தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது.

கச்சத்தீவை இலங்கைக்கு கொடுத்தது சட்ட விரோதமானது. அது இன்னும் இந்தியாவின் ஒரு பகுதியாகவே இருந்து வருகிறது என்பதை எடுத்துக்காட்டும் வகையில் வருகிற சுதந்திர தினத்தன்று (15-ந் தேதி) நானும் மற்ற மாநில கமிட்டி உறுப்பினர்களும் கச்சத் தீவுக்கு செல்கிறோம்.

அன்றைய தினம் அங்கு இந்திய தேசியக் கொடியை ஏற்றுவோம்."

மேற்கண்டவாறு அந்த கடிதத்தில் கூறப்பட்டுள்ளது.

### நல்லசிவம் பேட்டி

நல்லசிவம், நிருபர்களிடம் கூறியதாவது:—

கச்சத்தீவிற்கு செல்பவர்கள், 13-ந் தேதி மதுரையில் கூடி, ரெயில் மூலம் ராமேசுவரம் செல்கிறோம்.

14-ந் தேதி ராமேசுவரத்தில் தங்கி இருந்துவிட்டு, 15 ந் தேதி காலை, படகு மூலம் கச்சத்தீவு செல்வோம்.

"அங்கு கொடி ஏற்றுவோம்."

இவ்வாறு நல்லசிவம் கூறினார்.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

பன்னிரு திருமுறை விழா: எட்டாம் திருமுறை பற்றி அ. ச. ஞானசம்பந்தன் பேச்சு கபாலீஸ்வரர் கோவில். காலை 9-00 மணி.

### புதன் நிகழ்ச்சிகள்

நல்லாசிரியர் விருது அளிப்பு விழா அமைச்சர் இரா. நெடுஞ்செழியன் தலைமையில் கவர்னர் கே. கே. ஷா, ஆசிரியர்களுக்கு விருதுகள் வழங்குவார். இராஜாஜி மண்டபம், மாலை 6-மணி.

கலைஞர் கருணாநிதி நகர் மக்கள் நலமன்றம் துவக்க விழா அமைச்சர் அன்பில் தர்மலிங்கம் துவக்கிவைக்கிறார். அமைச்சர் மன்னை நாராயணசாமி சிவில் சப்ளை கார்ப்பரேஷன் டிப்போவை திறந்துவைக்கிறார். பி. டி. ராஜன் ரோடு பார்க் அருகில் மாலை 6-30 மணி.

# ப. காங்கிரசில் சேர சுதந்திரா எம்.எல்.ஏ.க்கள் விருப்பம்: காமராஜ் ஏற்க மறுப்பு

சென்னை, ஆக. 12—சுதந்திரா கட்சியைச் சேர்ந்த சில எம்.எல் ஏ.க்கள் பழைய காங்கிரசில் சேர விருப்பம் தெரிவித்தனர். ஆனால் அந்த யோசனையை ஏற்றுக்கொள்ள காமராஜர் மறுத்துவிட்டதாக பழைய காங்கிரஸ் தலைவர் ஒருவர் கூறினார்.

தமிழ்நாடு சட்டசபையில் உள்ள சுதந்திரா கட்சி எம். எல்.ஏ.க்களின் எண்ணிக்கை 5.

சுதந்திரா கட்சியாக தொடர்ந்து தனித்து செயல்படுவதா, 7 கட்சிகளின் இணைப்பான மக்கள் கட்சியுடன் சேர்ந்து "மக்கள் கட்சி" என்ற பெயரில் செயல்படுவதா அல்லது பழைய காங்கிரஸ் கட்சியுடன் சேருவதா என்பது பற்றி ஆராய்வதற்காக சட்டசபை சுதந்திரா கட்சியின் கூட்டம் இன்று நடைபெறுகிறது.

## மாணவர் தேர்தலில் தி. மு. க. வெற்றி

நாகை, ஆக. 12—நாகையில் உள்ள கனகசபைப்பிள்ளை தமிழ்க் கல்லூரியில் இலக்கிய மன்ற செயலாளர் தேர்தல் நடந்தது.

அதில் தி. மு. க. வைச் சேர்ந்த பெ. பாலசுப்பிரமணியம் என்ற மாணவர் வெற்றி பெற்றார்.

## எதிர்கட்சி தலைவர்கள் ஆலோசனை

சட்டசபையில் உள்ள எதிர்க்கட்சிகளான அண்ணா தி. மு. க., புதுகாங்கிரஸ், கம்யூனிஸ்டு, தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக்கழகம் ஆகியவற்றின் தலைவர்கள் நேற்று சென்னையில் கூடி முக்கிய ஆலோசனை நடத்தினார்கள்.

கம்யூனிஸ்டு தலைவர் கல்யாணசுந்தரம், கம்யூனிஸ்டு எம்.எல்.ஏ.க்கள், அண்ணா தி.மு.க, தலைவரான கோவை செழியன், டாக்டர் ஹாண்டே, புது காங்கிரஸ் துணைத் தலைவர் டி. என். அனந்தநாயகி, தாழ்த்தப்பட்டோர் முன்னேற்ற கழகத்தலைவர் சத்தியவாணி முத்து ஆகியோர் இந்த பேச்சுவார்த்தையில் கலந்து கொண்டனர்.

சட்டசபையில் தி மு க. மந்திரிசபை மீது கொண்டு வரப்படும் நம்பிக்கையில்லாத் தீர்மானத்திற்கு ஆதரவு அளிப்பது என்று அப்போது தீர்மானிக்கப்பட்டது. உணவு நிலைமை பற்றி சட்டசபையில் அவசரத் தீர்மானம் கொண்டுவருவது என்றும் அப்போது முடிவு செய்யப் பட்டது.

தி. மு. க. மந்திரிசபை மீது கொண்டுவரப்படும் நம்பிக்கையில்லாத் தீர்மானத்திற்கு ஆதரவு அளிக்க பழைய காங்கிரஸ் கட்சியும் சம்மதித்து விட்டதாக பின்னர் அறிவிக்கப்பட்டது.

## இ. காங்கிரஸில் பிளவு: ஜனதிபதி தேர்தலில் சவுத்திரிக்கு ஆதரவு

ஐதராபாத், ஆக. 12—ஜனதிபதி தேர்தல் சம்பந்தமாக, இந்திரா காங்கிரஸில் பிளவு ஏற்பட்டுள்ளது. இதனல் இ. காங்கிரஸ்காரர்கள் எதிர்க்கட்சி வேட்பாளரான திரிதிப் சௌத்திரிக்கு ஓட்டுப்போடுவார்கள் என்று தெரிகிறது.

ஜனதிபதி தேர்தலில் இந்திரா காங்கிரஸ் கட்சி வேட்பாளராகப் போட்டியிட பக்ருதீன் அலி அகமது தேர்ந்து எடுக்கப்பட்டு இருக்கிறார் அல்லவா?

பக்ருதீன் அலி அகமதுவை வேட்பாளராகதேர்ந்தெடுத்ததில் இ. காங்கிரசில் பிளவு ஏற்பட்டு இருப்பதாகவும், இ. காங்கிரசார் பலர்எதிர்க்கட்சி வேட்பாளர் சவுத்திரிக்கு ஓட்டு போடுவார்கள் என்றும் சோஷலிஸ்டு கட்சித் தலைவர் மதுலிமாயி நேற்று கூறினார்.

எதிர்க்கட்சிகளின் வேட்பாளராக திரிதீப்குமார் சவுத்ரி நிறுத்தப்படுவதற்கு முன்பு தான், காங்கிரஸ் வேட்பாளரான பக்ருத்தீன் அலி அகமதுவுக்கு ஆதரவு அளிக்க தி. மு. கழகம் தீர்மானித்ததுஎன்றும் ஆகவே தற்போது நிலைமையை மறுபரிசீலனை செய்யும்படி கோரி தமிழ்நாடு முதலமைச்சர் கருணாநிதிக்கு தாம் வேண்டுகோள் வெளியிடப் போவதாகவும் நிருபர்களிடம் மதுலிமாயி தெரிவித்தார்.

## கருணாநிதிக்கு மதுலிமாயிகடிதம்

ஹைதராபாத், ஆக. 12—வருகிற ஜனதிபதி தேர்தலில் எதிர்க்கட்சிகளின் வேட்பாளரான திரிதீப்குமார்சவுத்திரிக்கு ஆதரவு அளிக்கும்படி கோரி தமிழ்நாடு முதலமைச்சர் கருணாநிதிக்கு தாம் கடிதம் எழுதப்போவதாக சோஷலிஸ்டு தலைவரான மதுலிமாயி எம். பி. கூறினார்.

எதிர்க்கட்சிகளின் வேட்பா

## இலங்கையில் படி அரிசி ரூ. 8.50

நாகை, ஆக. 12—நாகையில் இலங்கை நாட்டு படகுடன் கைதான இலங்கை ஆசாமிகளில் ஒருவர் கூறியதாவது:—

எங்கள் இலங்கையில் படி அரிசி ரூ. 8.50-க்குவிற்கிறது. அதுவும் சில சமயங்களில் கிடைப்பதில்லை. ஆனால் தமிழ்நாட்டில் அரிசிக்கு பஞ்சம் இல்லாமல் கிடைக்கிறது. எங்கள் நாட்டில் இங்குள்ள படியின் அளவைவிட குறைவாக உள்ளது என்றுகூறினார்.

ஷேக் அப்துல்லா கருத்து:

## "அதிகாரக் குவிப்பால் தேசிய ஒருமைப்பாடு வெற்றிபெருது"

ஸ்ரீநகர், ஆக. 12—ஜம்மு காஷ்மீருக்கு சுயாட்சி கோருவது தேசிய ஒருமைப்பாட்டுக்கு விரோதமானதாகாது; எல்லா அதிகாரங்களும் மத்திய அரசில் குவிந்திருந்தால் தான் ஒருமைப்பாடு வெற்றி பெறும் என நான் கருதவில்லை என்று ஷேக்அப்துல்லா கூறினார்.

காஷ்மீரின் வருங்காலம் குறித்து அண்மையில டெல்லியில் தாம் நடத்திய பேச்சு வார்த்தைப்பற்றி ஜம்மு—லடாக் பிரதிநிதிகளின் கருத்தை அறியவே அவர் இந்த மாநாட்டைக் கூட்டியிருந்தார். இந்த இரண்டு நாள் மாநாட்டில் 200 பேர் பங்கேற்றனர்.

### சுயாட்சி திட்டம்

மாநாட்டுக்குத் தலைமை வகித்து ஷேக் அப்துல்லா பேசியதாவது:—

டெல்லியில் நான் நடத்திய பேச்சு வார்த்தை என்ன ஆகும் என்றால் நிச்சயமாக என்னால்கூற முடியாது. என்றாலும் அது வெற்றி பெறும் என்பதில் எனக்குள்ள நம்பிக்கையை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.

ஜம்மு. காஷ்மீருக்கு முழு உள்ளாட்சி அளிக்கக் கூடிய ஓர் அரசியலமைப்பை, அதன் பல்வேறு பகுதிகளுக்கும் பரவலாய அமைப்பில் விரிவான அதிகாரங்கள் அளிக்கக் கூடிய அமைப்பை எதிர்பார்க்கிறேன்.

பாகிஸ்தான் ஆக்கிரமத்துள்ள பகுதி உட்பட ஜம்மு-காஷ்மீரை 'காஷ்மீர்-ஜம்மு எல்லைப்புறப் பகுதிகள்' என்ற மூன்று நிர்வாக யூனிட்டுகளாகப் பிரிக்கக்கூடிய ஒரு திட்டத்தை, சில ஆண்டுகளுக்குமுன் ஜம்மு காஷ்மீர் மக்கள் மாநாட்டின் வழி நடத்தும் குழு தாக்கல் செய்ததை உங்களுக்கு நினைவூட்டுகிறேன்.

### அதிகாரக்குவியல்

ஜம்மு-காஷ்மீருக்கு சுயாட்சி வேண்டும் என்ற கோரிக்கை தேசிய ஒருமைப்பாட்டுக்கு விரோதமாகப் போய்விடும் என்று கருதுவது தவறு. எல்லா அதிகாரங்களும் மத்திய அரசிடம் குவிந்திருந்தால்தான் தேசிய ஒருமைப்பாடு வெற்றிபெறும் என்று நான் கருதவில்லை. மத்திய அரசில் இப்போது அசாதாரணமான அளவு அதிகாரங்கள் இருப்பதால் அது சமஷ்டி அரசிலிருந்து படிப்படியாக தனி முழுமையான (யூனிட்டரி) அரசாக மாறிக்கொண்டுவருகிறது.

தங்களுடைய எதிர்காலம், பாகிஸ்தானைவிட இந்தியாவின் கைகளிலேயே பத்திரமாக இருக்கும் என்ற முழு உறுதிப்பாடு காஷ்மீர்முஸ்லிம்களுக்குக் கிடைக்கவேண்டும். அப்போதுதான்காஷ்மீர் பிரச்சினையின் பெரிய முடிச்சை அவிழ்க்க முடியும்.

இந்தியாவுக்கு அளித்த எந்த உறுதிமொழியிலிருந்தும் நான் மாறவில்லை. ஆனல் அதே நேரத்தில், 1953 ஆம் ஆண்டு நிகழ்ச்சி (ஷேக் அப்துல்லா பதவியிலிருந்து நீக்கப்பட்ட சம்பவம்) மீண்டும் நிகழாது என்ற நம்பிக்கையை காஷ்மீர் முஸ்லிம்களுக்கு ஏற்படுத்துவதில்எனக்குள்ள கஷ்டத்தை இந்தியா உணரவேண்டும்.

ஒரு முஸ்லிம் என்ற முறையில் அல்லாமல் ஓர் இந்தியன் என்ற முறையிலேயே இவைகளையெல்லாம் நான் கூறுகிறேன். இருதேசக் கொள்கையை, துவக்கத்திலிருந்தே நான் எதிர்த்து வந்திருக்கிறேன்.

இவ்வாறு ஷேக் அப்துல்லா கூறினார்.

## அ.தி.மு.க.வில் கோஷ்டி சண்டை: மேடையை விட்டு மனேகரன் ஓட்டம்

கோவை, ஆக. 12—அ. தி. மு. க.வினரிடையே ஏற்பட்ட கோஷ்டி சண்டை காரணமாக எதிர்க்கட்சியினர் ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தில் பயங்கர ரகளை நடந்தது. இரு கோஷ்டியினரும் சோடா பாட்டில்களை வீசி கலாட்டா செய்தனர். இதனல் அ. தி. மு. க. துணைப் பொதுச்செயலாளர் மனேகரன் பேசமுடியாமல் மேடையைவிட்டு இறங்கி ஓடிவிட்டார்.

கோவை தேர் நிலையத் திடலில் எதிர்க் கட்சிகள் கூட்டம் நேற்று முன்தினம் நடந்தது.

அ. தி. மு. க., வலது கம்யூனிஸ்டு, இந்திரா காங்கிரஸ் உள்பட எதிர்க் கட்சிகள் இந்தக் கூட்டத்திற்கான ஏற்பாடுகளை செய்திருந்தார்கள். இந்தக் கூட்டத்திற்கு பேரூர் அ. தி. மு. க. அமைப்பாளர் சண்முகசுந்தரம் தலைமை தாங்குவார் என்று அறிவிக்கப்பட்டிருந்தது

அதன்படி, கூட்டத்துக்கு தலைமை தாங்குவதற்காக மேடையில் சண்முகசுந்தரம் ஏறியபோது, கூட்டத்தில் இருந்த பலர் கூச்சல் போட்டார்கள்.

"கோவை மேற்குதொகுதி அ. தி. மு. க. அமைப்பாளர் நடராஜன் தலைமை வகிக்க வேண்டும்" என்று குரல் எழுப்பினார்கள்.

### "மேடையை விட்டு கீழே இறங்கு"

இதைத் தொடர்ந்து நடராஜன் மேடையில் ஏறினார். அவரைப்பார்த்து கீழே இறங்கும்படி சண்முகசுந்தரம் கூறினார். ஆனல் அதற்கு நடராஜன் மறுத்துவிட்டார்.

இரண்டு பேர்களும் மேடையில் உட்கார்ந்து கொண்டார்கள். அதே நேரத்தில் எம். சி. பாலனும். நாஞ்சில் மனேகரனும் மேடைக்கு வந்தார்கள்,

### சரமாரி சோடா பாட்டில் வீச்சு

கூட்டம் ஆரம்பமாகி, எம். சி. பாலன் முதலில் பேசி முடித்தார். பிறகு மனேகரன் பேச எழுந்த போது அவருக்கு போலீஸ் கந்தசாமி என்பவர் மாலை அணிவித்தார். இவர் அ.தி. மு க.விலருந்து விலக்கி வைக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டவர்.

அவர் மாலை போடும்போது கூட்டத்தில் இருந்தவர்கள் "கந்தசாமி ஒழிக" என்று கூச்சல் போட்டார்கள். இதைத் தொடர்ந்து கூட்டத்தில் பெரும் குழப்பம் ஏற்பட்டது. கூட்டத்தில் சோடா பாட்டில்கள் வந்து விழுந்தன. இதனல் கூட்டத்தில் இருந்தவர்கள், பதறியடித்துக்கொண்டு சிதறி ஓடினார்கள்.

### மனேகரன் ஓட்டம்

இந்த ரகளையினல் நாஞ்சில் மனேகரன் பேச முடியாமல் மேடையை விட்டு இறங்கி ஓடி காரில் சென்றுவிட்டார்.

மீண்டும் அவர் வந்து பேசுவார் என்று ஒலிபெருக்கியில் அறிவிக்கப்பட்டது. என்றாலும் அவர் திரும்பவரவில்லை. கூட்டமும் அதன்பிறகு நடைபெறவில்லை.

## கருணாநிதிக்கு எதிரே எம். ஜி. ஆருக்கு இடம்

சென்னை, ஆக. 12—தமிழ்நாடு சட்டசபையில் முதலமைச்சர் கருணாநிதிக்கு நேர் எதிரே உள்ள இடம், அண்ணா தி. மு க. தலைவரான எம். ஜி. ஆருக்கு ஒதுக்கப்பட்டுள்ளது.

தமிழ்நாடு சட்டசபையில் இதுவரை பழைய காங்கிரஸ் கட்சியானது மிகப்பெரிய எதிர்க்கட்சியாக இருந்து வந்தது. அதன் பலம் 13 ஆக உள்ளது. அண்ணா தி.மு.க. வின் பலம் 15 ஆக இப்போது உயர்ந்துவிட்டபடியால் அந்தக் கட்சியே இப்போது மிகப் பெரிய எதிர்க்கட்சியாக மாறி விட்டது.

ஆகவே சட்டசபையில் எதிர்க்கட்சி வரிசையில் அ.தி. மு. க. தலைவரான எம். ஜி. ஆருக்கு முதலாவது இடமும், கட்சியின் துணைத்தலைவரான எட்மண்டுக்கு இரண்டாவது இடமும்ஒதுக்கப்பட்டுள்ளன.

பழைய காங்கிரஸ் தலைவர்களான ஆர். பொன்னப்ப நாடார், ஜோதிவெங்கடாசலம் ஆகியோருக்கு எதிர்க் கட்சி வரிசையில் முறையே 3வது இடமும், 4வதுஇடமும் ஒதுக்கப்பட்டுள்ளன.

தமிழ்நாடு கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் மணலி கந்தசாமி, தமிழரசு கழகத் தலைவர் ஈ. எஸ். தியாகராஜன் ஆகியோருக்கு நடுவிலுள்ள இடமானது தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக் கழகத் தலைவியான சத்தியவாணி முத்துவுக்கு ஒதுக்கப்பட்டுள்ளது.

பின்கண்ட காரணங்களை முன்னிட்டு. சட்டசபையில் 45 உறுப்பினர்களின் இடங்கள் மாற்றப்பட்டுள்ளன:—

(1) மந்திரி பதவியிலிருந்து சத்தியவாணிமுதது சமீபத்தில் நீக்கப்பட்டார். (2) ராஜாங்கம், சி, வி. எம். அண்ணாமலை ஆகியோர் புது மந்திரிகளாக மந்திரிசபையில் சேர்க்கப்பட்டனர். (3) புதிதாக தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக் கழகம் அமைக்கப்பட்டது. (4) அண்ணா தி. மு. க. வின் பலம் உயர்ந்துள்ளது,



''ரோஜாவின் ராஜா'' படத்தில் சிவாஜி கணேசன் வாணிஸ்ரீ

# திரை உலகம்

## ஓரே அறையில் டைரக்டருடன் இருக்க ஆசைப்பட்ட நட்சத்திரம்

சமீபத்தில் ஒரு விழா நடந்தது. அந்த விழாவில் இந்திப் பட உலகில் மிக முக்கியமானவர்களான ராஜ்கபூரும் சாந்தாராமும் சந்தித்துக் கொண்டனர்.

அப்போது ராஜ்கபூர் 'பாபி' படத்தில் வரும் ''ஹம் தும் ஏக் கம்ரே மே''பாடலைப் பாடினார் கதாநாயகனும், கதாநாயகியும்போல் நானும் சுந்தரராமும் ஓரே அறையில் இருக்கவேண்டும் என்று ராஜ்கபூர் கூறினார்.

''நானும், நீயும் ஆண்கள். இருவரும் ஒரு அறையில் இருந்து என்ன பிரயோசனம்? அதுவும் இந்த வயதிலா?'' என்றார் சாந்தாராம்.

எடிட்டிங் செய்வதில் திறமைபெற்றவர் ராஜ்கபூர். அதற்கு 'பாபி' படத்தின் வெற்றியே சான்று. அப்படிப்பட்ட ராஜ்கபூர், தான் சாந்தாராமுடன் ஓரே அறையில் இருக்க வேண்டும் என்று கூறி அவருடைய 'எடிட்' செய்யும் முறையைக் கற்றுக் கொள்ளத்தான் என்று கூறினார்.

இந்தத் தகவலைத் தெரிவித்த டைரக்டர் கே. பாலச்சந்தர், தானும் இதுபோல் ஏவி. எம். செட்டியாருடன் ஓரே அறையில் எடிட்டிங் செய்வதைக் கற்றுக்கொள்ள இருக்க விரும்புவதாகக் கூறினார்.



''பந்தாட்டம்'' படத்தில் ஜெயசுதா.

## சிரிக்க, ரசிக்க, சிந்திக்க சில சுவையான செய்திகள்

பட அதிபர் ஏவி. மெய்யப்பன் புத்தக வெளியீட்டு விழா சென்னை, மயிலை உட்லண்ட்ஸ் ஓட்டலில் நடைபெற்றது. வானதி பதிப்பகத் நடத்திய இந்த விழாவில் சிரிக்க, ரசிக்க, சிந்திக்க பல அனுபவங்கள் கூறப்பட்டுள்ளன. அவைகள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.

### நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியார்

செல்வம் சேர்ந்து வசதி பெருகினால் ஆபத்பாந்தவன், அனாதை ரட்சகன், கருணாநிதி என்பார்கள். நினைத்தது நடக்காவிட்டால், கேட்டது கிடைக்காவிட்டால் 'சண்டாள தெய்வம்' என்பார்கள்.

தெய்வம் யாருக்கும் செல்வத்தைக் கொடுப்பதில்லை. அறிவுச் செல்வத்தைத்தான் வழங்குகிறது. உழைப்பினால் தான் ஒவ்வொருவரும் முன்னேறவேண்டும்.

ஏவி. எம். செட்டியாரை 3 ஆண்டுகளாக சந்தித்துப் பழகுகிறேன். அவர் ஒரு நல்ல மனிதராக விளங்குகிறார். எனக்கு ஒரு ஆளைப் பார்த்தாலே அவர் எந்த மாதிரி என்று சொல்லிவிடுகிற அளவுக்கு அனுபவம் உண்டு. நீதிபதியாகயிருந்த அனுபவம்தான். என்னிடம் ஒரு பட்டியல் இருக்கிறது. அதில் ஏவி. எம். இருக்கிறார். சொல்கிறமாதிரி செய்கிறவர்—செய்கிற மாதிரி சொல்கிறவர் என்பதனால் எனது பட்டியலில் இருக்கிறார்.

### என். மகாலிங்கம்

இளமையிலேயே பள்ளியில் படிப்பதுடன் தொழிற் பயிற்சி பெறவேண்டும். குறைந்தபட்சம் 3-வதுபாரம் படித்தபின்புமாணவர்களுக்கு வேலைக்குப் போய் பயிற்சி பெற வாய்ப்பளிக்க வேண்டும்.

### கே. பாலச்சந்தர்

மேனாவின் மோதிரக் கையால் குட்டுபட்டவன் நான். இப்படிக் கூறுகின்றேனே தவிர - அவர் ஒரு மோதிரம் கூடப் போட்டுக்கொள்வதில்லை. தயவுசெய்து இனி மேலாவது மோதிரம் போட்டுக்கொண்டு என்னைப்போல் பலரைக் குட்டி, உருவாக்க வேண்டும்.

1951-ம் ஆண்டு முதன் முதல் சென்னைக்கு வந்தபோது சினிமா ஷூட்டிங் பார்க்கும் பைத்தியம் எல்லா இளைஞர்களையும்போல் எனக்கும் இருந்தது. முதன் முதலில் நண்பர்கள் உதவியால் 'பராசக்தி' ஷூட்டிங் பார்த்தேன். செட்டில் அப்போது இவர்தான் மேனா என்று கூறினார்கள். 20 ஆண்டுகளுக்கு முன்பு பார்த்ததைப் போலவே இப்போது அவர் இருக்கிறார்.

எத்தனையோ சாதனைகளைச் செய்த அவர் தமிழ்ப்படம் எடுக்காமல் சமீபகாலமாக விலகி இருக்கிறார். அவ்வாறு இல்லாமல் நல்லவழியில்மற்றவர்களைத் திருத்தி, திரும்ப அழைத்துவர அவர் மீண்டும் தமிழ்ப் படங்களைத் தயாரிக்க வேண்டும்.

ஸ்டூடியோவில் மாலை 4 மணி முதல் 7 மணிவரை காக்காய்கள் வந்து சத்தம் போட்டுக்கொண்டே இருக்கும். அதனால் படப்பிடிப்பு நடத்த முடியாமல் போய்விடும். இந்தத் தொல்லையைப் போக்க காக்காய் விரட்டுவதற்கென்றே ஒரு பையனை மேனா வைத்தார். இப்போது காக்காய்கள் வருவதில்லை.

மேனா அவர்கள் ஒரு கலைக்களஞ்சியம். அவரைச் சந்தித்துவிட்டுத் திரும்பும்போது மிகுந்த துணிவோடும் புத்தி சாலித்தனத்தோடும் திரும்புவோம்.

### ஏ. பி. நாகராஜன்

கிருஷ்ண ஜெயந்தி நல்ல நாள். அதிலும் விழாவிற்கு கிருஷ்ணசாமியே தலைமை வகிப்பது மிகப் பொருத்தம்.

இதுவரையில் ஏவி. எம். அவர்கள் கதை வசனம் எழுதவில்லை என்ற ஒரு குறை இருந்தது. இப்போது தனது வாழ்க்கை வரலாற்றை - கதையாக



வசனமாக எழுதி அவர் அந்தக் குறையையும் போக்கிவிட்டார்.

தனக்கு உதவியவரைத் தனது தந்தை போன்றவர் என்று இந்தப் புத்தகத்தில் 135-வது பக்கத்தில் நன்றி உணர்வுடன் குறிப்பிட்டுள்ளார். கலையுலகில் நன்றி உணர்வு பட்டுப் போய் விட்டதை மீண்டும் துளிர்க்க வைப்பதைப்போல் செய்துள்ளதற்கு அவருக்கு நன்றி தெரிவிக்க வேண்டும்.

### சின்ன அண்ணாமலை

நடிகர் திலகம், நீதிபதி, தொழிலதிபர் மகாலிங்கம் ஆகியோர் வந்திருப்பதால் கட்டாயம் பத்திரிகையில் போடுவார்கள், அதனால் புத்தகத்துக்கு நல்ல விளம்பரம் கிடைக்கும். என்னைப் பற்றிப் போட வேண்டுமென்றால் சின்ன அண்ணாமலையும் பேசினார் கூட்டம் கலைந்தது என்று பத்திரிகையில் வரும். அவர்கள் மீது தவறில்லை நடுவில் ஒரு புள்ளி வைக்க மறந்து விடுவார்கள். அவ்வளவு தான்!

புத்தகத்தில் உள்ள முக்கால் வாசி விஷயங்களைப் பற்றி எல்லோரும் பேசினார்கள். மீதமுள்ள கால்வாசியையும் நான் பேசி விட்டால் யாரும் புத்தகம் வாங்கமாட்டார்கள்.

பதிப்பகம் நடத்துவது, புத்தகங்களை வெளியிடுவது இப்போது மிகவும் சிரமமாக உள்ளது.

இப்போது எதை வேண்டுமானாலும் பார்க்கலாம். இந்தப் பேப்பரைப் பார்க்க முடியாது. நூலகங்களை நம்பியே வாழ வேண்டியுள்ளது. அப்படியில்லாமல் எல்லோரும் புத்தகம் வாங்க வேண்டும்

ஏவி. எம். அந்தக் காலத்தில் இருந்தே தேசபக்தர், தேசபக்தி பாடல்களை பாரதியார் பாடல்களை படங்களில் புகுத்தினார்.

### அழ. வள்ளியப்பா

எழுத்தாளர்களுக்கென்றால் உடனே உதவும்தாராள மனம் உள்ளவர். இதுவரை நானே எழுத்தாளர்களுக்கு சிறப்பு செய்யும் பல நிகழ்ச்சிகளுக்கென்று ரூ. 40 ஆயிரத்துக்கு மேல் வாங்கியுள்ளேன்.

''பிருந்தாவனம்'' படத்தில் ஜெய்சங்கர், ஜெயசித்ரா.



''மேல்நாட்டு மருமகள்'' படத்தில் குமாரி வாணி

## 'ஜீசஸ் வருவார்'

ஸ்டேஜ் பிரண்ட்ஸ்நாடகக் குழுவினர் தங்களது புதிய நாடகத்திற்கு ''ஜீசஸ் வருவார்'' என்று பெயரிட்டுள்ளனர்.

எஸ். வி. சகஸ்ரநாமம், காந்திமதி, சாமிக்கண்ணு, ராஜப்பா, சூரியப்பிரபா, அச்சச்சோ சித்ரா ஆகியோர் நடிக்கின்றனர்.

கோமல் சுவாமிநாதன் கதை வசனம் எழுதுகிறார்.

ஆகஸ்ட் மாதம் 18-ம்தேதி இந்த நாடகம் அரங்கேறுகிறது.

## லதா சமையல்: முத்துராமன் கிண்டல்

ஆனந்த் அலுவலகத்துக்கு அவசரமாகப் புறப்படுகிறான். இந்த சமயத்தில் வசந்தி அருகில் வருகிறாள்.

''அய்யா...டியூட்டி ஆபீசரே...இன்னைக்கு மத்தியானம் சீக்கிரம் சாப்பிட வர்றீங்களா?'' என்று கேட்கிறாள்.

''இன்னைக்கு... என்ன... விசேஷம்?'' என்று கேட்கிறான் ஆனந்த்.

''விசேஷம் ஒன்றுமில்லை. இன்னைக்கு நான்தான் சமைக்கப் போறேன்'' என்று வசந்தி கூறுகிறாள்.

''ஏழுகுண்டலவாசா... நீதான் என்னைக் காப்பாத்தணும்...'' என்று ஆனந்த் கிண்டலாகக் கூறுகிறான்.

இக்காட்சி சுலோசனா பிக்சர்ஸ் ''அன்பு ரோஜா'' படத்திற்காகப் படமாக்கப் பட்டது

ஆனந்தாக முத்துராமனும் வசந்தியாக லதாவும் நடித்தனர். மனோகர், தேங்காய் சீனிவாசன், செந்தாமரை, விஜயலட்சுமி, எஸ். எல். லட்சுமி, ஆகியோரும் நடிக்கின்றனர்.

பாலமுருகன் கதை வசனம் எழுதுகிறார். சங்கர்-கணேஷ் இசையமைக்கின்றனர்.

தேவராஜ்—மோகன் டைரக்ட் செய்கின்றனர். துரை, பாலையா இருவரும் தயாரிக்கின்றனர்.

## மேகங்கள்

சாந்தி ஸ்டேஜ் கிரியேசன்சார் 'மேகங்கள்' எனும் புதிய நகைச்சுவை நாடகத்தை அரங்கேற்றுகின்றனர்.

ஜெகதீஷ் கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார்; சீனிவாசன் தயாரிக்கிறார்.

எஸ். எஸ். சந்திரன், தேவானந்த், சுந்தரம், உதயசங்கர், குமாரி ரஞ்சனா, பத்மினி ஆகியோருடன் ஜெகதீசும் நடிக்கிறார். 'எக்ஸ்' குழுவினர் இசையமைக்கின்றனர்.

அக்டோபர் மாதம் முத்தியால்பேட்டை கலைமன்றம் சார்பில் கலைவாணர் அரங்கில் அரங்கேறுகிறது,



''என்மகன்'' படத்தில் மஞ்சுளா.

## ஜெய்சங்கர், ஜெயசித்ரா காஷ்மீர் செல்ல திட்டம்

பிரபுவை வசந்தா திருமணம் செய்துகொள்கிறாள். பங்களாவில் இருந்தால் கணவன் மனைவி சந்தோஷமாக வாழமுடியாது என்று சிறிய வீட்டிற்குச் செல்கின்றனர். தன் சொத்துக்களை கவனிக்கும் பொறுப்பை பிரபு, உயிர் நண்பன் ராஜாவிடம் ஒப்படைக்கிறான்.

சிறிய வீட்டிற்கு வந்த பிறகும் வசந்தா விரும்பியபடி கணவனுடன் ஜாலியாக இருக்க முடியவில்லை.

வெளியில் ஆசையாக எங்காவது புறப்படுவார்கள். அந்த சமயம் பார்த்து பிரபுவின் காரியதரிசி ஏதாவது வேலை என்று வந்துவிடுவார். வேறுவழியின்றி பிரபு தங்கள் திட்டத்தைத் தள்ளி வைத்து விடுவான்.

கடைசியில் ஊரைவிட்டுச் சென்றால் தான் மகிழ்ச்சியாக இருக்கமுடியும் என்று வசந்தா கருதுகிறாள்.

காஷ்மீருக்கு இருவரும் செல்வதென்று முடிவு செய்கின்றனர். வசந்தா எல்லா அலுவல்களையும் ஒத்தி வைக்கச் சொல்லிவிட்டு விமான டிக்கெட் வாங்கிவிடுகிறான்.

இனிமேல் தடையிருக்காது என்று அவள் மகிழ்கிறாள். அவர்கள் புறப்படும் சமயத்தில் காரியதரிசி வந்து நிற்கிறார்.

''தயவு செய்து எந்தவிதமான சிக்கலாக இருந்தாலும் நீங்களே பார்த்துக்கங்க. இப்ப அவரைப் பார்த்தால் அவர் எங்கள் புரோகிராமை கேன்சல் செய்துவிடுவார்'' உங்களோடு வந்துவிடுவார் என்று காரியதரிசியை விரட்டாத குறையாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

இந்தசமயத்தில் பிரபு [illegible] விடுகிறான். காரியதரிசி கூறிய செய்தியைக் கேட்டு வசந்தா பயந்ததுபோலவே காஷ்மீர் பயணத்தைக் கேன்சல்செய்து விடுகிறான்.

வசந்தாவிற்கு பெரும் ஏமாற்றமாகி விடுகிறது.

இக்காட்சி யோகசித்ராவின் ''அக்கரைப் பச்சை'' படத்திற்காக ஏற்காட்டில் படமாக்கப்பட்டது.

பிரபுவாக ஜெய்சங்கரும், மனைவி வசந்தாவாக ஜெயசித்ராவும், காரியதரிசியாக ஜெய்கொண்டானும் நடித்தனர்.

என். வெங்கடேஷ் டைரக்ட் செய்தார்.

ஜி. கே. தர்மராஜ் தயாரிக்கிறார்.

## ''பிரேம் நகர்'' (இந்தி)

தமிழில் வந்த ''வசந்த மாளிகை'' இந்தியில் ''பிரேம் நகர்'' ஆகியுள்ளது.

முதன் முறையாக ராஜேஷ் கன்னாவும், ஹேமமாலினியும் இணைந்து நடித்துள்ள வண்ணச் சித்திரம்.

அரங்க அமைப்பும், வண்ணப் படப்பிடிப்பும் கண்ணைக் கவரும் வகையில் உள்ளன.

வின்சென்டின் ஒளிப் பதிவு அற்புதம்—அருமை!

பிரகாஷ் ராவ் டைரக்ட் செய்துள்ளார்.

ராமா நாயுடு பிரும்மாண்டமான முறையில், பெரும் செலவு செய்து தயாரித்துள்ளார் என்பதை ஒவ்வொரு காட்சியிலும் காண முடிகிறது.

## முத்துராமன், வாணிஸ்ரீ நடிக்கும் புதிய படம்



சரோஜினி மூவிசார் 'கஜ்ஜ பூஜா' என்ற கன்னடப் படத்தைத் தமிழில் தயாரிக்கின்றனர்.

இந்தப் படத்தில் முத்துராமன், வாணிஸ்ரீ, எஸ். வி. சுப்பையா, எம். என். ராஜம், வி. கே. ராமசாமி, செந்தாமரை, குமாரி சச்சு, சண்முகசுந்தரம் ஆகியோர் நடிக்கின்றனர்.

சிவப்பிரகாசம் தயாரிக்கிறார். டி. ஆர். ராமண்ணா டைரக்ட் செய்கிறார்.

## இன்றைய சினிமா

**சென்னை**

ராம் — கொஞ்சும் சலங்கை

நியூ எல்பின்ஸ்டன் — சட்டைக்காரி

நேஷனல் — ராமன் எத்தனை ராமனடி

ஈராஸ் — பெண்ணென்று கண்டேன்

**தாம்பரம்**

நேஷனல்- குமாஸ்தாவின் மகள்

எம். ஆர். தியேட்டர் — மனோரஞ்சன்

ஸ்ரீசித்ரா: ஹிந்துஸ்தான் கி கஸம்

**வில்லிவாக்கம்**

ராயல்: தங்கப்பதக்கம்

**குரோம்பேட்டை**

வெற்றி: நேற்று-இன்று-நாளை



'பணத்துக்காக' படத்தில் ஏ. சகுந்தலா, சிவகுமார்.

Printed by S.V.G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-600028, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Chief Editor: S. V. G. Sowrirajulu; Honorary Editor: N. Muthukumarasami;